சர்வேஸ்வராயநம :

# புதுவை வித்வான்சாமிநாதபிள்ளை

யவர்கள் பாடிய நசலாக்கலம்பகம்.

மூலமும் உரையும்.

புறத்தாக்குடி சின்னப்பிள்ளை யவர்கள்பாடிய

பிரலாபவண்ணமும் பரணியும்.

ஷை - பு. வி. சாமிநாதபிள்ளை பேரன்

அப்பாசாமிப்பிள்ளை

கேட்டுக்கொண்ட பிரகாரம்.

சென்னைக்கல்விச்சங்கத்து மானேஜராகிய

## அ. முத்துச்சாமிப்பிள்ளை யவர்கள்

வைத்திருந்த பிரதியையும் மற்றபிரதிகளையுங்கொண்டு

வித்வான்களா லாராயப்பட்டு

தஞ்சை நகரம் பூங்கொடி சின்னப்பிள்ளைகுமாரன்

அப்பாவுபிள்ளையால்

இரக்ஷணிய - ஸ்ரீ சு ஆருடிக - வ்

லுசித்தானியன் அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

சர்வேஸ்வராயநம.

# நசரைக்கலம்பகம்.

காப்பு.

## வெண்பா.

பொன்னுலகி னின்னமுதைப் பூவிற் பொழிந்தருளு... *
மின்னுலவு நன்னசரை வேந்தன்மேன் - மன்னும்...... *
கலம்பகத்தைப் பாடிக் களிப்புறவித் தேவன்......... *
கலம்பகனேர் தாளெனக்குக் - காப்பு................ *

(இதன் பொருள்.)

வானுலகினினிய வமிர்தத்தைப் பூவுலகத்திற்பொழியு மொளியுலாவிய நன்னசரைக் கிறைவன்மேனிலையாகுங் கலம்பகத்தைப் பாடிக் களிப்புண்டாக விக்கடவுளி னொளியாபரணத்துக் கிணையானபாத மெனக்குக்காப்பாமென்க.

மயங்கிசைக் கொச்சகக் கலிப்பா.

மணியாருங் கடலுடுத்த வசுமதியின் மறமழிப்ப - - *
அணியாரு முகத்தியல்வ தமராரதிற் தருத்தியுற - - - *
அருவழியா யிருந்துலகி லகண்டபொருட் கமலனுநீ - *
கருவழியா யுருவாகிக் கன்னிச்சே யாயினையே - - - *
விண்டளங்க ளொருங்காக வியப்புடனின் றணியணியாய் - *
பண்டடவி யிசையோசைப் பாவியம்பிப் பரிந்துவப்பத் *
தூதரெல்லாம் பணிகேட்பத் தூயரியா சனர்தாங்கப் - *
பாதமலர் தொழுதிறைஞ்சப் பல்லுயிர்கள் புகழ்ந்துவர. *

இவை - நான்கடித் தரவிரண்டு

(இ - ள்.) மணிநிறைந்த கடலுடுத்த வுலகத்தின் பாவத்தை யழிக்கவழகுநிறைந்த திருவுளத் திசைந்ததை வானவர்திற் தாசை கொள்ளவு மருபவழியாயிருந் துலகிலுள்ள சகல பொருளுக்குங் கடவுளாகிய நீ கர்ப்பவழியாய் மனுவுருவாகிக் கற்பழிவில்லாக் கன்னியின் மைந்தனானாய்: வானிறளங்க ளனைவரு மதிசயித் தணியணியாய்நின்று வீணைவாசித திசைப்புள்ள குரற்றொனியாய்ப்

பாட் டியம்பி யன்போடுமகிழவும் வான்றூதரனைவரு முனதேவ லூழியங் கேட்கவுந் தூயபத்திராசனர்க ளுனது பத்திராசனத் தைத்தாங்கவுமொருங்குடன் யாவருமுன துபாதமலரைத்தொழுது பணியவு முயிருள்ள சகல சராசரங்களு முன்னைப் புகழ்ந்து கொண்டு வருமா மென்க.

இனி - நான்கடித் தாழிசையாறு.

மண்ணுலகோர் துயரொழிக்க மாவியென வுதித்தனகால் - ✻
விண்ணுலகோ ருடுநவமாய் விதித்ததுமுன் விருதாமே - ✻
துதிபதியாய் மறைப்பொருளாய்த்துவமுளவென் னளிநலமா ✻
யதிபதியா யொருதனிக்கோ லரசியற்கை புரிவோனே. - ✻
நலமேவு மாரியமா நாட்டினிய நசரையெனுந் - - - ✻
தலமேவித் தயைநிழலைச் சத்தியெனத் தரித்தனையே. - ✻
திருவேசு நசரையெனுந் திரியுலகு மிகவாக - - - - ✻
மருவீச நிலையமுறல் வளமுளநின் றகையாமோ. - - ✻
எவ்வுயிரும் புரந்தளிக்கு மின்குணத்தி னியைபுடனே - ✻
செவ்வுயிரா மருண்மாலைத் திருவாய்ந்த கையேந்திப். - - ✻
பாராரு மனிதருக்குப் பகுத்தளிப்பப் பரிவாகுஞ் - - ✻
சீராருந் திருவுளத்தின் செயலினுக்கு வரம்புளதோ. - ✻
கானிறைந்த மென்புகையுங் கவிநிறைந்த மலர்மாலை - ✻
தானிறைந்த நறைவீசத் தகைமையுடன் வீற்றிருந்தோய். - ✻
மேகமின்வா கனமேறி விருதுசயக்கொடியேந்தி - - ✻
நாகமின்மே லெழுந்தருளி நடுக்கேட்கும் பெருமானே. ✻
உள்ளடங்கா வுள்ளுறைவா யுள்ளளவெல் லாங்கடந்து - ✻
தெள்ளளியாய் நின்றினிய திருப்பொழியும் பெருமானே. ✻
ஆவியென்னு மழகணங்கை யாதரித்தின் பருத்தியுறத் - ✻
தாவியணைத் திடுந்தேவ தயைநிறைந்த பத்தாவே. - - ✻
வானவர்க்கு மெட்டாத வரைவிலநின் மகிமைதனை - - ✻
மானவர்க்குண் மிகவெளியன் வசனமதாற் புகழ்வேனோ. - ✻
விண்டோய்ந்த விபுதர்களும் விழைவுடனே யுனைப்புகழ ✻
மண்டோய்ந்த கயவனுனை வளஞ்செவியிற் கினிதாமோ. ✻

(இ - ள்.) பூவுலகத்தார் துன்பமொழிக்கச் சூரியன்போல் நீ யுலகத்திற்பிறந்தபோ தாகாயத்தி லிலங்கிய வொரு நவநட்சத்திர முண்டாக்கினது முனதுவிருதாமே; வணங்கப்படு மெய்யான கட வுளாய்வேதப் பொருளாய் நிலையுள்ள வென்னன்பின் நலமா யதிபதி

யாயிருந்துமூவுலகிற்கு மொரு தனிச் செங்கோற் கொண் டரசி யற்கை செய்யப்பட்டவனே அழகார்ந்த சிரேஷ்டதேசத்தினிய நசரைமாபுரமென்னுந் தலத்தை விரும்பி யிருந் துன் றயைநிழ லைக்குடையாகத் தரித்தாய்; திருவேசு நசரையென்னும் வாசனை மூவுலகமு மதிகமாய் வீச வத்தலத்தின் கோயிலி லிருப்பது மாட்சிமையுள்ள நின் றிருவியல்போ; உயிரியாவையும் புரந் திர ட்சிக்கு மின்பக்குணத் திசைப்போடு நல்லுயிரா மருண்மாலை யைச் செல்வம்பொருந்திய கையிலேந்தி யுலகத்திலுள்ள மனித ருக்குப் பங்கிட்டுக்கொடுக்கப் பட்சமுள்ள வுனதழகிய திருவுளத் தின் செயலுக் களவுளதோ, வாசனைநிறைந்த சாம்பிராணியு மகிற் புகையு மழகுநிறைந்த மலர்மாலையு நிறைந்த வாசம்வீசப் பெரு மையுடன் வீற்றிருக்கப் பட்டவனே, மின்னிய மேகவாகனமேறி விருது வெற்றிக்கொடியேந்தி யொளியாக வொலிவேற்றுமலைமே லெழுந்தருளி நடுக்கேட்கு மரசனே, உள்ளத்திலடங்காம லுள் ளத்திலுறைவா யவ்வுள்ளத்தி னளவெல்லாங் கடந்து தெளிந்த வன்பாயிருந் தினிய செல்வத்தைப்பொழியுங் குருவே, ஆத்தும மென்னு மழகியபெண்ணை யாதரித்தவ்வாத்தும மின்பாசையாகும் படியாய்த் தாவியணைத்துக்கொள்ளுந் தேவதயைநிறைந்த பத் தாவே, வானவருங் கண்டறியக்கூடாதவளவில்லாத வுன்மகிமையை மனிதருக்குண் மிகவு மெளியனென வென்சொல்லாற் புகழ்வேனோ! விண்ணுலகத்தி லிருக்கும் வானவர்களு மாசையோடினைப்புகழ மண்ணுலகத்திலிருக்கு நீசனென வென்சொல் லுனது வளமைபொ ருந்திய செவிக் கினிதாகுமோவென்க.

இனி—அராகம்.

பகையுறு கடியிடு படைமிட லதுகெடத் - - - ✻
தொகையறு முரமொடு துணிவுள வரியினை. - - ✻
மருடரு வினைவிளை மறமுழு தொழிகவே - - - ✻
தெருடரு கதிரொளி திகழணி யுடலினை. - - - ✻
குறையுறை துயரினி குறையென வழிவுறப் - - - ✻
பொறைநிறை முறையுறை பொருவரு மன்றயினை. - ✻
இறையிட விறையவ ரொழிவுறு மிறையினை - - - ✻
துறைமுறை யறமலி துதிநுதி விதியினை. - - - ✻

(இ - ள்.) பகையுள்ள பிசாசுகள் செய்யும் படையின் வலிமை கெட வளவிறந்த வல்லமையுந் துணிவுமுள்ள சிங்கமானுய், மயக்

கந்தரும் வினைகளை விளைவித்தபாவமுழுது மொழிகவே தெளிந்த கதிரொளியிலங்கு மழகுருவானாய், குறையுறைந்த துயர மினி நீர்க்குமிழிபோ லழியப் பொறுமையு மாட்சிமையு முறைமையு முறைந் துவமிக்கரிய வேதமானாய், அரசரிறைகொடுக்கும் வடிவுள்ளவரசனானாய், நல்லொழுக்கமுந் தருமமும் வாழ்த்துதலும் புகழு முண்மையு மானாயென்க.

இனி - ஈரடித்தாழிசையாறு.

ஆதிநடு முடிவுமிலா வறவாழி யறுகுணனீ - - *
சோதியுமி பதிநிகராச் சுயம்பான சுடரொளிநீ. - - *
தேவராற் றெளிந்தறியாத் திவ்வியமாய் நிரந்தர நீ - - *
மூவராய் மூவரொன்றாய் முதல்வனா யிருப்பவனீ. - *
பொருளாதி யானவனீ பொருளினுக்குட் பொருளானீ - *
பொருளாவி சிதையினுநீ பொருளொடுநீ றப்பொருணீ. *
மண்ணளவும் விண்ணளவு மறையளவுங் கலையளவு - - *
மெண்ணளவு மெட்டாம லெங்கும் நிரஞ்சனனீ. - - *
அன்புடனே யுனைத்தேடு மன்பருளந் தன்னிலென்று - *
மின்புடனே யிருந்தவருக் கின்பமிடு மீசனுநீ. - - - *
நினைப்போற்றி நினைவாழ்த்தி நினைப்பவர்க டுயராகின் - *
மனந்தேற்றிக் குறைமாற்றி வரம்பொழியு நாயகனீ. - - *

(இ - ள்.) துவக்கமு நடுவு முடிவுமில்லாத தருமக்கடலாகிய வாறிலக்கணமுள்ளவன்நீ, சூரியன் சந்திரன் முதலிய சுடரொல்லா நிகராமற் றற்சுயம்பான சுடரொளிநீ, தேவராற் றெளிந்தறியாத திவ்வியமா யெப்போது மிருப்பவனீ, - பிதாச் சுத னிஸ்பிரீத்து சாந் தென்னுந் திரித்துவ மொன்றான முதல்வனா யிருப்பவனீ, சகலபொருளுக்கு மாதியானவனீ, பொருள்களுக்குட் பொருளானவனீ, பொருளுயிர்கெட் டழிந்தாலு மப்பொருளோ டழியாப் பொருளானவனீ, புவனத்தளவும் வானுலகளவும் வேதத்தளவுங் கல்வித்துறை சாத்திரத்தளவு மனிதரெண்ணத்தளவு மெட்டாம லெங்கும்நிரஞ்சனனானவனீ, அன்போடுனைத்தேடு மன்பரிதயத்தி லென்று மின்பத்துடனே யிருந்தவருக் கின்பந்தருந் தயாபரனீ, நின்னைப் போற்றி நின்னைவாழ்த்தி நினைப்பவர்க டுயரங்கொண்டாராகி லவர்கள் மனதைத் தேற்றிக் குறைகளைமாற்றி வரம்பொழியு நாயகனீயென்க.

இனி - பலவகை அம்போதரங்கம்.

தந்தையாய்த் தனயனுய்த் தலைவ னன்பனுய்ச் - - *
சிந்தையா சானுமாய்ச் செவ்வி யாயினை. - - *
கனிவிட மறமரு கன்னி மாதில - - - - *
கனியக டதிலொரு கனியு மாயினை. - - - *

வேறு.

முற்பவ மகல வுதைத்தனை முரட்பவ முறிய வொழித்தனை *
பற்பவ வலியை யொடுக்கினை பழிபுரி யலகை முடுக்கினை. *

வேறு.

வெற்புதித்தனை யற்புதித்தனை வேதமாயினை நாதமாயினை - *
கதிதிறந்தனை மதிதிறந்தனை ஒருமையாயினை குருமையாயினை. *

(இ - ள்.) தகப்பனுமாய் மனுமகனுமாய்த் தலைவனுமாய்ச் சிநேகிதனுமாய் புத்திதருங்குருவுமா யன்புள்ளதாயு மாயினை - கனிவிடம்ற வாசப்பூமுகைகற்பு மாருமற் கன்னிப்பெண்ணின் வயிற்றி லொருகனியுமாயினை - (வேறு) - முற் பவமாகிய வாதனைவைசெப்த பாவமகல வுதைத்தனை - பகையாகிய குற்றத்தை முறித்துக்கொன்றனை - பலபாவ வல்லமையை யொடுக்கினை - பழி செய்யும்பிசாசை முடுக்கியோட்டினை - (வேறு) - மலையிற்பிறந்தனை அதிசயமுள்ளவனுயினை வேதமாயினை யவ்வேதத்தொனியாயினை வானுலகைத்திறந்தனை ஞானக்கண்டிறந்தனை ஒருமையாயினை குருமையாயினை யென்க.

எனவாங்கு-அகவற்சுரிதகம்.

மன்றலா நசரையில் வைத்த நின்பதங். - - - *
கன்றலா மெனதுளக் கவலை மாறவும். - - - - *
வினைமிடிக பிறந்து மிகுந்த வாகுலந். - - - *
தினைதுணிமறையவுந் திருவணிதரித்தாள். - - - *
என்னுயிர்விளக்கத் திமிழ்வாழ்வடையு - - - *
மன்னுயிர்வாழ்க வடிவுருவாழ்க - - - - - *
தவத்துறுசிறப்பினர் சாற்றுந். - - - - *
துவத்துடன்வந்தாய் தோன்றலாக - - - - *

(இ - ள்.) நீண்டதெருவின் சிறப்புடைய நசரைமாபுரத்தில் வைத்த வுன்திருப்பாதத்தை வருத்தமானவென துள்ளத்தின்கவலை

மாறவுந் துன்பமுந் தரித்திரமு மகலவு மிகுந்தவியாகுலமுஞ் சிறுமையுங் கோபமுமொளிக்கவு மத்திருப்பாதத்தைத் திருமாலை யாகத் தரித்தாள்வா யப்பொழுதென் னுயிர் விளக்கமா யினியவாழ் வடையுமுனது நிலையான வுயிரோவாழ்க வடிவுள்ள திருவுருவே வாழ்க தவத்திலங்கிய சிறப்புடையோர் சொல்லும்நிலை தவறும லிங்கரசனாக வந்தாயென்க. இவையெல்லாமொரு மயங்கிசைக் கொச்சகக்கலிப்பா வென்றறிக. (க.)

வெண்பா.

தோன்றலார் தோன்றலாய்த் தொன்னசரை மாபுரியி - ✻
லான்றலாய் வந்தமைந்த வையனை நா - னூன்றலாய்ச் - ✻
சிந்திப்ப தல்லாமற் றேவொன்று மற்றவரை - - - ✻
வந்திப்ப துண்டோ மனம். - - - ✻

(இ - ள்.) அரசர்க்கரசனாகிய பழமையான நசரைமாபுரியில் மாட்சிமையோடு வந்தமைந்த வையனை நா னூன்றலான சார்பா யென்சிந்தையி னினைப்பதல்லாமற் றேவொன்று மற்றவரைவணங் குவதுமுண்டோ வென்மனமென்க (உ.)

கலித்துறை.

மனமே யினிநீ மறஞ்சேருந் தீங்கை மறந்துவிட்டுக் - ✻
கனமே வியவரண் சூழ்நசராபுரிக் காவலனைத் - - - ✻
தினமே கருதித் தியான செபதவஞ் செய்திடுவாய் - - ✻
தனமே வியவா னகமு மடைந்திடச் சந்ததமே. - - ✻

(இ - ள்.) மனமே யினிமேல் நீயாவஞ் சேரும் பொல்லாங் கெல்லா மறந்துவிட்டு மேகமுலாவிய மதில் சூழ்ந்த நசரைமா புரி யரசனைத் தினமுநினைத்துத் தியானசெபதவஞ் செய்யக்கட வாய், இனி பொன்னுலகிலுள்ள வானந்த பாக்கியத்தைநீ யெப் போது மடையும்படியா யென்க. (௩.)

விருத்தம்

சந்ததமு மைந்தர்களே புந்தியிலுறுத்தி - - ✻
ரந்தரமுதற்புவி யனைத்தையு மமைத்து - - ✻
நந்தர்கள் பணிந்திடவே கந்தரமுதித்து - - - ✻
சந்தநச ரைப்புரி தரித்த விறையாமே. - - - ✻

(இ - ள்.) வானுலகமுதற் பூவுலகனைத்தையு முண்டாக்கினவன் மனுடனு யிடையர்கள்பணியவே மலைக்குகையிற் பிறந்தழகிய நச

ராமாபுரியிற்றரித்திருக்குமரசனுமென் றெப்போது மானுடரே யுங்கள் புத்தியில் வருவித்துக் கொள்வீர்க ளென்க. (௪)

வண்ணவிருத்தம்.

இறைமிகுத்த வுழையர்நித்த மிருமைபெற்ற தலைவர்மற்ற விரணவீரர், மறைமிகுத்த வுரைகள்கற்று மவுலமுற்று பொறியடக்கும் வலியினாலுங், கறைமிகுத்த சனனமுற்ற கசடழிக்க நசராமேவுங் கருணையாதி, முறைவகுத்த நன்ற யகற்றி முதிருமுத்தி பெறுமதிற்பின் முடிவுநீமே. - *

(இ-ள்.) இராசாக்கள் மந்திரிகள் நித்தம்பெருமைபெற்ற படைத்தலைவர்மற்றவிரணவீர ரிவர்தம் பலத்தாலும் வேதத்துள்ள மிகுந்தசொல்லைக்கற்று மவுனமாயைப்பொறியென்னுங் கண்மூக்கு காது வாயுடலை யடக்கினவர் தம்பலத்தாலு முத்திமோட்சமடை யக்கூடுமோ கூடாததெங்ஙனமென்னி லிரத்தநிறைந்த விச்செனனங்கொண்ட சென்மக்களங்கத்தைப் போக்க நசராமாபுரியில் மேவிய கருணை யாதியாகிய கடவு ளொழுக்கமா யுரைத்த வேத நூல்வழிபா லிச் சென்மக் களங்கத்தைத் துடைத்து முத்திசேர்வ தன்றி யிவ்வழியடையாமல் வழுவினவர்க்கு முடிவுகாலந்திநர கமாமென்க (௫.)

இன்னிசை வெண்பா.

முடிபூண் டுலகாளு மூவரசர் வந்து - - - *
படிமீண்ட தென்னசராப் பார்த்திவநின் - - *
னடிபூண்டார் துன்பகற்றி யார்வமுறச் செய்தாய் *
மிடிமீண் டெனையாளு மே - - - *

(இ-ள்.) மகுடமுடிதரித் துலகத்தையாளு மூவரசர்வந் துலகத்தை மீண்டளித்த வழகிய நசராக்கிறைவனே யுன்பாதாம் புயத்தைச் சிரத்திற் றரித்துக்கொண்டார் அவர்கள் துன்பத்தைப் போக்கிக் களிப்புண்டாகச்செய்தாய், அப்படி யினியென் றரித்திர த்தைப்போக்கி யிரட்சித்தாளுமென்க. (௬.)

விருத்தம்.

மீண்டனை புவியைப் பூண்டனை சவியை வியத்தனை நயத்தனை நசரா, யாண்டனை யன்பிற் றாண்டினை யிம்பி லளித்தனை

களித்தனை திறனுற், சேண்டனை யுறவு மாண்டனை பெறவுந் திருத்தினை வருத்தினை யெனக்கு, காண்டனை தெருளைத் தீண்டினை யருளைக் கலித்தனை பலித்தனை நயனே. - - *

(இ - ள்.) பூவுலகத்தை மீண்டளித்தா யவ்வுலகத்துக் கழகை யணிந்தாய் புகழுண்டாக நசரைமாபுரியை விரும்பியிருந் தானை டா யுன்னன்மைச்செலுத்தினு யின்பத்தினு லென்னை யளித் திர ட்சித்தா யப்படிநா னிரட்சிக்கப்பட்டதனுல் மகிழ்ச்சியானு யுன் றிறமையினுல் நா னுயர்ச்சி யுண்டாகவும் பெருமையடையவு மெ ன்னைத்திருத்தினு யெனக்கு நன்மைவருவித்தாய் தெளிவைத்தோ ற்றுவித்தா யருளைக்கொண் டென்னைத்தீண்டினுய் நலமென்னிடத் திற் றளிர்த்துத் தழைக்வு மதனு லெனக்கு லாபமாகவுஞ்செய்தா யென்க. (எ.)

சந்த விருத்தம்.

நயனுறைபு நயினவெனு நகரியினி லொருவிதவை நனிபிரிய முறுமகனெனு, மய்யனுயிரில் விளியவுட லயனமதிற் கொணரவனை மலிதுயரி னழுதுவரவே, பயனுறைபு நசரைபுரி பரமனவ ணுயரகல பரிவுடனே மகவுயிரிடும், வியனுறைபு மிவனளின விரையடிக டொழுவருயிர் விளிவினகை வியனுல கிலே. - - - - - *

(இ - ள்.) நன்மையுறைபு நயினவென்னு நகரத்திலிருந்த வொரு கைம்பெண்ணனவளுக் கதிகப்பிரியமான பாலக் குமார னிருந்தான் அவ னிளம்பிராயத்தி லிறந்துபோக வப்பிரேதத்தை வழியிற் கொண்டுவரும்போ தவன்றுய் வெகு துயரா யழுது கொண்டு வருகையில் நற் பிரயோசனமுள்ள நசரைமாபுரிக்கட வுள் வழியிற்கண் டவள் துயரத்துக்கிரங்கி யத்துன்ப நீங்க வன் போ டவள்மகனுக்குயிரைத் தந்தான், பெருமையுறைந்த விவன் வாசத்தாமரைப்பாதத்தைத் தொழுவோர்க ளுயிர் நித்திய சாவில் லாமற் களிப்பாகத் தேவலோக நித்திய சீவியராவாரென்க. (அ.)

புய வகுப்பு.

உலவியநலம்பொன் னிலநகையருந்த வுரவமுதரங்கண் ணழகு நிகரின்றி - துவ நவசுவையாக வைக்கப்பரிந்தன *
வுவரியுடைகொண்ட வுலகதிலகண்ட வுயிர்களுளசெந்து வகை வகைமிருந்த - பலபலபொருள்கோடி சிஷ்டித்தமைந்தன *

உதயவரெனுமெழுந்தண் ணிலவுமிழுதிங்க ளுமிநிறைவசந்த மெரி
யழலுமங்கு - வுருமொடு தினநாகஞ் சுற்றித் திரிந்தன *
ஒருநரனவன்றன் னுடலிலொருமங்கை யுருவுறவிசைந்து திரு
நப்நயந்து - களியுளா வரமேவ நட்புற் றுறைந்தன *
அலகைவினையன்றி மனிதருயிரெஞ்ச வடர்முகில்பொழிந்த
வவரினலரெண்மர் - தவிரவுயிர்யாவும் பட்டற் றழிந்தன *
அணியுறையுளும்ப ரடிமைபணிகொண்ட வரிகரிடருந்த தலை
மகர்மடிந்து - மிடியுறு மவரோகச் சித்தத் திரங்கின *
அடர்வுதொடர்கின்ற பகையவர்நடுங்க வடல்புயனெருங்க வலை
நிலைபிரிந்து - கடனடுவழியா யிருக்கப் புரிந்தன *
அடையலர்நுழைந்து கடலினுயிர்சிந்த வவருணவுகொண்ட
புனல்சிலைவழங்க - விரகுறு புரிவேகப் பற்றற்றொழிந்தன *
இலகுமறைசென்ற நெறிபுனலுநின்ற வெழினகர்தகர்ந்த சது
படைகலங்க - வரியொரு தினமீயி னிற்கப் படர்ந்தன *
இகலருமொடுங்க சிலைமழையரங்க விழையொலிபனென்ற
விறைதலையரிந்த - சிகைவர னகலார் செருக்கக் கனிந்தன *
இருளதனிலண்டர் முழுதறச்சிதைந்து மிகலறுவிளைந்த விறை
பலதுவன்று - மிதிகொடு வினைநூறி கட்டுப்பொழிந்தன *
இடருடனிறந்த மனிதருயிர்தந்து மிணைபதமொடுங்கை முடவ
ருடனங்கப் - பிணிபலதுயரோகப் பெற்றிப் பயந்தன *
நலமுறவுமைந்த ருனதுயிர்வருந்த நகமிகவுடைந்த தலமிக
வதிர்ந்த - புதையுறுசிலராக மட்கட் டிரிந்தன *
நகைநிலையமுழ்ந்து திரையதுகிழிந்த நனிகதிருமங்கப் பகலிரவு
பொங்க - நவமுறவுயிராக வுற்றுற் றெழுந்தன *
நயனுறமேவயங்கு வியனுறவயங்கி நலியுலகமெங்கு மனமழை
சொரிந்து - சகலமுடமழித்தீறின் மக்கட் குயர்ந்தன *
நடுவதுவிளம்பி நவையர்நரகுய்த்து நபவரையணைந்து நளிர்
கதிவழங்குந் திருநசரையினுதன் வெற்றிப்புயங்களே. *

(இ - ள்.) நம்மையுலாவிய வானுலகில் அவ்வுலகின்பருந்த ஞானதிக்கவானவரையிணையில்லாதவழகாய் நிலைத்திருக்கவொன்ப துசபையாக வுண்டாக்கிவைக்க வல்லானதும், கடலையுடையாகவு டுத்தவுலகையு மவ்வுலகத்திலுள்ள சகலசீவசெந்துக்களையும் வகை வகையாய்நிறைந்தபற்பலபொருள் கோடாகோடிகளையு முண்டாக் கக் கனிவாகினதும், சூரியனுங் குளிர்ந்தகதிரையுமிழுஞ் சந்திர நட்

சத்திரங் காற் றக்கினியு மிடிக்குமேகமு மெப்போது மாகாயத்
திற் சுற்றித்திரிய வைத்ததுவும், ஓராதிமனிதனையு மவனுட லெலு
ம்பினு லொரு மங்கைப்பருவமுள்ள பெண்ணையு முருவா யிசைத்
துச் செல்வ நன்மைகளைத்தந்தவர் களிப்புள்ள வரமேவியிருக்கப்
பட்சமுள் ளுறைந்ததுவும், பேயின் றந்திர வினைக்குள்ளா யிவர்
களு மிவர்பிதிர்களு முயிர்மெலிந்து பாவிகளாகவிவ்விருவருக்குப்
பிற்கால மிவர்கள் பிதிர்களை நெருங்கிய மேகம்பரந்து மழை
பெய்ய வவர்களி னல்லவராகிய வெட்டுப்பெயர்தவிர மற்றவருஞ்
சகலசீவசெந்து யாவும் பட்டற்றழிந்ததுவும், அலங்காரமுள்ள வெ
சித்துநாட்டிற் பகைவரிசரேல் சாதியாரை யடிமையேவற்கொண்
டவர் துன்பத்தை நினைக்க வாக்கினையாய்த் தலைச்சன் பிள்ளைகளைக்
கொன்று தரித்திரப்பட்ட விசரேல் சனங்களை மீட்டுக் கொண்டு
போகச் சித்தத்திரங்கினதும், அவர்கள்போம் வழியைப் பின்றொ
டர்ந்து சென்ற பகைஞர் நடுங்க நெருங்கிய மேகத்தா லிருப
டைக்கு நடுவே மறைக்கச் சமுத்திரந் தன்னிலைபிரிந்து வழிகொ
டுக்க வக்கடனடுவழியாகப் போகச்செய்ததுவும், பகைவ ரவ்வழியி
னுழைந்து கடலி லவர்க ளுயிரைச் சிந்திச்சாகவு மக்கரைசேர்ந்த
விசரேலாருக்கு மேகம் போசனமுங் கல்லு தண்ணீருங் கொடுக்
கவும் விரகாசையாற் பொங்கிய சோதோமென்னு நகரத்தை
நெருப்புமழையால் எரித்து நீறுக்கிப்போட்டதுவும், விளங்கிய
வேதப்பெட்டியை யூதர் கொண்டுபோம் வழியிற் சோர்தானென்
னு நதித்தண்ணீ ரடுக்காகநின்று போகிறவர்க்கு வழிவிட்டதுவும்,
அழகிய வெரிக்கோவென்னு நகர மறைப்பேழையைக்கொண்டு
கோட்டையைச் சுற்றிவைக்க மதில் தகர்ந்ததுவும், அந்நகரத்தரச
னுறவாக வவனைப்பகைத்த வைந்தரசர் சதுரங்கசேனைக ளுஞ்
சச் சோசுவனைக்கொண் டழிக்கும்போது சூரியனை யொருநாள்
முழுது மாகாயத்திற் கதிர்பரவி நிற்கச்செய்ததுவும், பகைவ
ரொடுங்கியோடுகையில் மேகம் விளைத்துக் கொண்டு கன்மழை
பெய்தழுத்திப்போடவுஞ் சுதித்தையென்னும் பெண்கையா லொ
லிபே ரொன்னுமரசன் வாளையுருவி யவன்றலையை யறுப்பித்தது
வும், தலைமயிரில் வல்லமை வரம்பெற்ற சஞ்சோனென்பவனைக்
கொண்டு பகைவரைவெல்ல விரக்கஞ்செய்ததுவும், சேதையோ
னென்னு மூழவனையு மூந்நூறு வீரரையுங்கொண்டு அமலேக்கு
மதியானென்னு மிரண் டரசரு மவர் சதுரங்கசேனைகளு மோ

ரிரவினில் முழுதுங்கெட வழித்துக்கொன்றதுவும், இன்னம் பகை விளைவித்த பல வரசரைக்கொன்றதுவும், பிசாசுகள் செய்யுங் கொடிய வினைகளைக்கொன் றழித் தெமக்கு நன்மைகளைப் பொழிந்ததுவும், துன்பப்பிணியா லிறந்துபோன வநேகம்பெயருக் குயிரைத் தந்ததுவும், இரண்டு கைகால் வழங்காத முடவருக்கு மற்றப் பலபிணியாளருக்குந் துன்பத்தைப்போக்கி நன்மைபெறச் செய்ததுவும், மனுடர் வானுலகநன்மையை யடையச் சிலுவையி லுன்னுயிரைவிட் டிறக்கும்போது மலைகள் மலைகளோடு மோதியுடைந்ததுவும், பூமிமிகவு மதிர்ந்ததுவும், கல்லறையிற் புதைக்கப்பட்ட சிலபெய ருடலோடு பூமியைவிட் டுயிர்த்ததுவும், ஒளியுள்ள பிதாவாலயத்தின் றிரைச்சீலை யிரண்டாய்க் கிழிந்ததுவும், அதிகவொளி நிறைந்த சூரியனொளி மங்கி மறைந்து பகலிரவோ டொத்திருந்ததுவும், புதுமைக ளதிகமாக மீளவு முயிர்த்தெழுந்ததுவும், நன்மையுள்ள பரமகதிக்குப் பெருமையோ டெழுந்து போனதுவும், இனிமே லுலகமெங்குந் துன்பமுண்டாக வக்கினிமழையைச் சொரிந்து சருவசங்காரம்பண்ணி முடிந்தபின் மானுடரனைவரையுமவரவர் தேகத்தோ டுயிர்ப்பிக்கவும் உயிர்த்தெழுந்த மனுடரை நடுத்தீர்வைகேட்டுப் பாவிகளைச்சபித்து நரகத்திற் றள்ளிப் புண்ணியவான்களை யின்பமாய்ச் சேர்த்துக் குளிர்ந்த மோட்சானந்தத்தைக் கொடுக்குஞ் செல்வ நசரையி றைதன்வெற்றித்தோள்க ளென்க. (௩.)

## தவம் - விருத்தம்.

புயலடரு மலைமீது யோகராகப் - போயரிய தவமிகவே
புரிந்திட்டாலும், அயலடர வனல்பரப்பி நடுவினின்மெய் - வாகமெல்லாம் வெந்தாலுஞ் சடைகொண்டாலும், பியலடருஞ்
சருகருந்தி மெலிந்திட்டாலும்-விண்ணுலகங் கிடையாது
மெய்யாய்ச்சொன்னேன், செயலடர்ந்த நசரையிறைதுதித்
தவ்வேதத் - திருப்பாதை நடப்பர்கதி சேர்வரென்றேன். *

(இ - ள்.) மேகமடர நெருங்கு மலையின்மீது முனிவராகச் சென் றரியதவங்களை யதிகமாகச் செய்தாலுந் தன்னருகிடமெங்கு மக்கினியைப்பரப்பி நடுவினின் றவ்வுடலம்பெல்லாம் வெந்தாலுஞ் சடைகளை நீளமாய் வளர்த்துக்கொண்டாலுங் காட்டினிறைந்த சருகருந்தித் தேகமெல்லா மெலிந்தாலும் வானுலகங்கிடையாது

மெய்யாய்ச்சொன்னேன் நல்லொழுக்க மடர்ந்த நசரைமன்ன னைத் துதித்து அவன்வேதத் திருப்பாதையி னடப்பவர் பரமகதி சேருவா ரொன்றேனென்க. (ய.)

சவலை வெண்பா.

என்னுயிர்க்குக் காதல்ன மேர்நசரை யாளுகின்றோன் *
மன்னுயிரைத் தான்படைத்த மன்னவனு - - - *
மின்னுயிரைத் தேடி யிதயமெலி வாய்ச்சோரு - - *
மின்னுயிரைக் காணு விழி. - - - - - *

(இ - ள்.) என்னுத்துமத்துக்குப் பத்தாவா மழகிய நசரை மாபுரியை யாளுகின்றவன் பல்லுயிரைத் தான்படைத்த மன்ன வனும், எனக்கின்பமான வுயி ரவ்வுயிரைத்தேடி யென்னிருத யமெலிவாகிறது, அந்தவொளியான வுயிரைக்காணும லென்கண் சோருகிறதென்க. (நசரைத் தலைவனாகிய சேசுநாயகனை ஆத்தும மென்னுந்தலைவி தேடி நொந்ததென் றறிக.) (யக)

கைக்கிளை - கலித்துறை.

விழியா னதுதுயிற் கொள்ளாத் தலையணை மீதுகண்ணீ - *
ரொழியாம லோடி நனைத்திட வுள்ளமு மூசலிட - *
விழிவாங் குறைகண் டெழினச ரைப்பதி யேதனிவைத் - *
தழியாயி னென்னை யணையாமற் போன வருந்துயமே. - *

(இ - ள்.) என்னிடத்திற் றாழ்வான குற்றத்தைக்கண் டழ கிய நசரைத்தலைவ னழியாத வாத்துமமின்னாகிய வென்னைச் சே ராமற் றனியேவைத்துப்போன வருந் துயரத்தா லென்கண்களா னவை நித்திரைகொள்ளாமற் றலையணைமீது கண்ணீர்க ளோயாம லோடி நனைத்திடவு மென்னுள்ளத்தி லவனில்லாத துக்கத்தா லுள் ள மலைந் தூஞ்சலாடவு மானதென்க. (ஏ தனிவைத் தென்பதில் ஏ - யென்பது பிரிவினைக் குறிப்பா மென்றறிக.) (யஉ.)

ஆசிரிய விருத்தம்.

அருந்துயரை மாற்றுகின்ற மருந்தொன் றுண்டோ வழுங் கண்ணீர்ச் சொரியாமன் மருந்தொன் றுண்டோ, மருந்திள நன் மூழுவலுற மருந்தொன் றுண்டோ முடியாத சுகமடை ய மருந்தொன் றுண்டோ, வருந்து முயிர் சாவாத மருந் தொன் றுண்டோ மதியேசொல் கலக்கமுறில் வருப்பக்கே

ண்மோ, பெருந்தகையார் நசனைமன்ன னருளின்மாலைப்
பிழிமருந்தா லிப்பிணிபோய்ப் பேறுண்டாமே. - - *

(இ - ள்.) அரிய துயரத்தை மாற்றுகின்ற மருந்தொன் று ண்டோ, அழுங்கண்ணீர்ச் சொரியாமல் மருந்தொன் றுண்டோ, மயிலிறகின் குருத்துக் கிணையான பல்லா விளநகை கொண்டிருக்க மருந்தொன் றுண்டோ, முடிவில்லாத நித்தியசுக பேரின்பத்தை ய டைய மருந்தொன்றுண்டோ, வருத்தப்படு மாத்துமம் நித்திய சா வாகிய நரகத்திற் சாவாதிருக்க மருந்தொன் றுண்டோ, என்புத்தி யேசொல்வாய், உனக்குங்கலக்கமாகில்நான்றானே சொல்லக்கேள், பேரழகார்ந்த நசனை நாயக னருண்மாலைதருந்தேன்மருந்தா லிந்த ப்பிணியெல்லாந் தீர்ந்தானந்தப்பே றுண்டாமென்க .(௰௩.)

தாழிசை.

உண்டுய ரின்ப மகிழ்ந்துவா ழொண்ணல முற்றிடு மும்பரோ *
பண்டுயர் பொன்னச னைப்பதி பாசமெனக்குள தாதையாற் *
றெண்டுய ராவலவற்குரை சொல்லிக்கொணர்ந்திடு வீர்களால் *
வண்டுயர் நீங்கு மிதற்குமை வந்தனை செய்தனன் முந்துவீர். *

(இ - ள்.) பேரின்பத்தை யுண்டுமகிழ்ந் தொளியழகுபெற் று வாழும் வானவரே! உயர்ந்த பொன்னசனை மூதூர் நாயகன்மே லெனக்கன்புள்ளதாதையா லவ னடிமையாகிய வென்னதிக வாவலை யவற்குச்சொல்லி யழைத்துக்கொண்டு வருவீர்களாகி லென்னை வருத்தும் பலத்த துன்பநீங்கும், இதற்காக வும்மை வணக்கஞ் செய்தேன் போவீர்களென்க. (௰௪.)

விருத்தம்.

முத்துமெந்தையுந் தந்துவந்தையு மூருகுவாசமும் பெருகு
நேசமும், பந்திவாரமும் புந்தியாரமும் பத்திவானமுந் தி
த்திபானமும், பெந்துமுன்னையு மெந்த னன்னையும் பிரிய
வன்மையு முரியவன்மையு, மிந்துகாயனு னைந்துகாயனுஞ் ரி
சறேலத்தனூர் நசனைநித்தமே. - - - *

(இ - ள்.) முதலென் றகப்பனுங் கல்வியின் பெருமையும் வாசனைக்கு வாசனையும் பெருகியநேசமு மொழுங்காகிய நாளு மென்புத்திக்கொளியுள்ள முத்தாபரணமு மென்பத்தியானகதிய மினிப்பா மிரசமு மென்னுற்றுருந் தமயனு மென்றாயும் பிரிய நன்மையு முரியபெலனுமாமொன்னிற் சந்திரனிகராய்ச் சீரத்தைக்

கொண்டவர், அவ்வுடலி லைந்துகாயமானவர், இசறேல் சனங்க ளுக்குப் பிதாவானவர், நசரைமாபுரியின் கடவுளே யென்க. (௧௩.)

காலம்-கலிவெண்பா.

நித்தங் கொடும்பவத்தி னெஞ்சழன்ற தேயெனக்குச் - ✻
சத்தமுதிர் வேனிற் றணர்காலங் - கைத்தபவ. - ✻
வாக்கிணையாந் தீநரக மாங்கூதிர்க் காலமென - - ✻
நோக்கி யச்ச முற்றுமன நொந்தேனே - போக்கியபின் - ✻
முன்பனிக்கா லம்போன் முரண்பவத்தை நோக்கிறற் - - ✻
பின்பென் னுளஞ்சிலுத்துப் பேதகமாம் - பின்பனியின் ✻
காலம்போ லின்னமொரு காசை யுறிலதிக - - ✻
வாலமென வாமென் றகநடுங்கு - நீலமுள்ள - - ✻
கார்க்கால மொப்பக் கடும்பவத்துக் காயமுது - - ✻
சூர்க்காலந் தன்னைத் துலைத்ததற்பின் - சீர்க்காலங் - ✻
கண்டவிள வேனிற் காலமென வென்னிடத்திற் - - ✻
றண்டவமா ஞானத் தழைதுளிர்த்துக் - கொண்டலரு - - ✻
மிக்காலந் தன்னி லெழிலினசரை யாளுகின்றோன் - ✻
றக்கா னடிமையெனத் தான்கொண்டா - னற்காலம் - ✻
அப்பரத்தில் வாழ வருத்தியுடன் மிகவும் - - ✻
நம்புகின்ற வாதனுமே நான். - - - - ✻

(இ - ள்.) நித்தமுங் கொடிய பாவத்தினு லென்னெஞ் சழன்று வெந்த தெனக்குச் சத்தித்துக் காற்றுவீசு முதிர்வேனி லாகிய வுட்டணகாலமாங் கசப்பான பாவத்துக் காக்கிணையான தீ நரகமுண்டென்று குளிர்காலமென்னநோக்கி யச்சமாய் மனநொ ந்தேனே, இக்காலமும் போக்கியபின் முன்பனிக் காலம்போற் பகையாகிய பாவத்தைக் கண்டபின் பென்னுள்ளஞ்சிலுத்து வே ற்றுமையாகும் பின்பனிக்காலம்போ லின்னமொரு குற்றத்தை யுட்கொண்டா லதிகவிடமாமென் றென்மன நடுங்கு மிருள்மே கம்பொழியுங் கார்க்காலத்துக் கிணையாகவிடப் பாவத்துக்கா ய முது துன்பக்காலத்தைத் துலைத்தபின்னர் செல்வகாலமாகக் கண் டவிளவேனிற்காலம்போலென்னிடத்திற் குளிர்ந்ததவமா ஞானந் தழைதுளிர்த்துக்கொண்டு நன்மலர் மலர்ந்திருக்கு மிந்தக்காலத்தி லழகிய நசரையாளுகின்ற பெருமையுடையோ னென்னை யடிமை யாகக்கொண்டான் இந்த நற்காலத்தில் வானுலகில் வாழ வாசை யுடன் மிகவு நம்பியிருக்கிற வாதுமம் நான்றானென்க. (௧௪.)

கலிப்பா.

ஆதனுருவமைந்தானு மாதனுருவமைந்தானு மகத்துயரத்திருப்பானு மகத்துயரத்திருப்பானு, மோதநனி யுளத்தானு மோதநனி யுளத்தானு முவர்ப்பில்லா மறையானு முவர்ப்பில்லா மறையானுஞ், சீதநய நிழலானுஞ் சீதநயநிழலானுஞ் சிறுமைமறுத் தளிப்பானுஞ் சிறுமைமறுத் தளிப்பானும், போதநன்று தருவானும் போதநன்று தருவானும், பொன்னசைாப் பதியானும் பொன்னசைாப் பதியானே. ✻

(இ - ள்.) ஆதிதகப்ப னுருவானவனுங் குருவின்வடிவாக விளைசந்தவனு மேலானவிடத்துள்ள திருச்சோதியானவனும் பாவமிகுதியை யறுத்திருப்பவனுங் கடனிகராய்ப் பெருமையின் முயற்சி கொண்டவனும் படிப்பிக்க வதிக மனமுள்ளவனும் வெறுப்பில்லா வேதத்தை யுடையவனு மெங்குமில்லையென்ற நிந்தையில்லாதவனுங் குளிர்ந்த வின்பவருளுடையவனு நீர்போற்பயன்றருஞ் செல்வமுள்ளவனுந் தரித்திரத்தைநீக்கி நற்கொடைகொடுப்பவனுந் துன்பத்தைக்கொடாம லிரட்சிப்பவனும் ஞானநன்மை விருக்ஷமானவனு மறிவின் பெருமை தருபவனுங் குற்றஞ்சேராதவனு மழகியநசைா நாயகனேயென்க. (௰எ.)

வண்டு-கலித்துறை.

பதியா நசைாப் பதியாள் பரஞ்சுடர் பாலின்மிக்க - ✻
வதியா வலோடு பறந்தன தேன்கண்மீ ளாததென்னே - ✻
துதியா மொலியால் மருண்டன வோபயந் தோற்றியதோ ✻
திதியா னதேதவை கண்டன தாண்மலர்ச் செங்களியே. - ✻

(இ - ள்.) அரசராயிருந்து நசைாப்பதியையாளும் பரமசுடராகிய கடவுளிட்த்தி லதிகவாவலோடு தாதுக்குபறந்துபோன வண்டுகள் திரும்பாத தென்னவோ, அவனைவானவர் வாழ்த்திய வீணையொலியைக் கேட்டுமயங்கி நின்றவோ, தேவசமுகத்தைக் கண்டு பயந்தோன்றி நின்றவோ அவைகணிலையானதேது அவன் றுள்மலரின்செந்தேனைக்கண்டு நின்றதாமென்க. (௰அ.)

வெண்பா.

செங்கமல மோரேழுஞ் சேதாம்ப லோரிரண்டுந் - ✻
துங்கமுகங் கண்கை காற்றுய்யதர - மங்கண் - ✻
மதுகரங்க டந்தளிக்கும் வாழ்நசைா யூரான் - ✻
மதுகரங்கா ளுண்மின் மகிழ்ந்து. - - - - ✻

(இ - ள்.) செந்தாமரை யோரேழுஞ் செவ்வாம்ப லோரிரண்டு முயர் முகமுங் கண்களுங் கால்களுந் தூயவுதடுகளு மலர்ந்து தேன்களைக்கொடுக்கும் வண்டுகளே! அத்தேன்களை மகிழ்ச்சியோ டுண்ணுங்களென்க. (௰௯.)

விருத்தம்.

மகிழ்வா நசரைப்பதிமேவு மன்னுவிந்தச்சனனமது [திருக்கு *
இகழ்வாங்குருதி தசைநரம்பு மெலும்புத்தோலு மிசைத் *
திகழ்வாமலமுஞ் சீழ்நாற்ற நிறைந்தவுடலைச்சுமந்தலையாத் *
திகழ்வாமுனது திருப்பதத்திற்சேர்க்க வடியேற்கிரங்காயே. *

(இ - ள்.) மகிழ்ச்சியாய் நசரைமாபுரியில் விரும்பியிருக்கு மன்னவனே, இச்செனனமாகிய திகழ்ச்சியான விரத்தஞ் சதை நரம்பெலும்புந் தோலுமொன்று யிசைத்துக் கட்டப்பட்டிருக்கு மசைவானதில் மலமுஞ் சீழுந் துர்க்கந்தநாற்றமு நிறைந்தவுட லத்தைச் சுமந்தலைந்ததுபோதும், இனிமேல்விளக்கமான வுனது திருப்பாதத்தி லென்னைச்சேர்க்க வடியேனுக்கிரங்காயோ வென்க. ஏ-யென்பது வினைக் குறிப்பாமென்றறிக. (உ௰.)

நேரிசைச் சிந்தியல் வெண்பா.

இரக்க முறுநசரை யீசன் றிருத்தாட் - *
சிரக்கவினைப் பூண்க தினமும்-புரக்கும், - *
வரக்கலனைப் பாடுகவென் வாய். - - - *

(இ - ள்.) இரக்கமுள்ள நசரைமாபுரிக் கடவுளின் றிருப் பாதத்தை யென்றலை யழகாகத் தினமுந்தரிக்கக் கடவது, என்னை யிரட்சிக்கும் வரத்திறுபரணமானவனைத்தானே பாடக்கடவ தென்வாயென்க. - - - - - - (உக.)

குறம்-விருத்தம்.

என்வாய்ச் சொல்லுந் தவறும லெல்லா முண்மையாயிருக்குந்*
தென்வாய்த்துகிரா நல்லீரே தெளிந்தஞானக் குறமின்னுள் *
பின்வார் சூர்ப்பந்தனிலெனல்லைப் பெருகவளித்தீ ரினியுமக்கு *
மின்வாய் நசரைப்பதிவானில் மிகவாயளிப்பா னிரணியமே. *

(இ - ள்.) என்வாய்ச் சொல்லுந் தவறும லெல்லா மெய்யா யிருக்கும், அழகிய பவளவாய்மாதர்களே! தெளிந்தஞானக் குறப் பெண்ணு ளெனக்குச்சுளகுநிறைய நெல்லைவாரி யதிகமாய்த்தந்தீர், இனிமே லுமக்கொளியா யிலங்கு நசரைநாயகன் வானுலகின் திர வியத்தை மிகுதியாய்க் கொடுப்பானென்க. - - - (உஉ.)

### வண்ண விருத்தம்.

இரணியவிற்புரி நசனைதரித்திடு மிறைவனருட்பெறு நல்லாரே, யிமகரநெற்றியிற் சிறுவையரிக்குறி யிடவொருமித்தது மெய்யாமே, அரணவெழிற்குறி நுதலிலவிர்த்திட வடவிடமொய்த்திடு மொல்லாரு, மருபமெனத்திரி மதன்விறலற்றிரியதிசயமுற்றுறுமல்லாதே, கரணமலிப்பொறிசதவையடைத்தணி கவினுறுமிக்குறி மல்லாலே, கடுகியமுட்டிடமுடுகுமுயிர்ப்பொலி கதவையுடைத்திட வொல்லாதே, கிரணமலித்தகை பெருகியவிக்குறி கிளர்தருமுற்று முவப்பாமே, கிலமெலிவுற்றிட மதியமுமக்கொரு கிளவியுரைத்திடநில்லாதே. - - - - *

(இ - ள்.) பொன்னொளியாயிலங்கு நசனைமாபுரியிற் றரித்திருக்கு மரசனருளைப்பெற்றமாதரே! பிறையொத்தநெற்றியிற் சிறுவைபச்சைக் குறியிட்டுக்கொள்ள நீங்களொருமித்ததுமெய்யாமே. ஆகையாற்காவலாகிய விவ்வழகியகுறி நெற்றியிலிலங்கியிருக்கயுத்தத்துக்குக் கூடிவரும்பகைவரும் அரூபமாய்த் திரியுமன்மதன் திறமையழிந்துதோற்கவும் அக்கினியதிசு வெற்றியைத் தருமல்லாமல்ஐம்பொறியென்னுங் கண்முதலாக்குக்காதுநாவுடலின்கதவையடைத்தலங்காரவழகாகிய விக்குறியின் வல்லமையாற்றூழிடில் முடுகிவருந்தென்றலா லிக்கதவையுடைக்கவுந் திறக்கவுமியலாதே. கிரணப்பிரபைபெருகிய விக்குறி தருமொளியிலெட்போது மிருந்துமகிழ்ச்சிகொண்டவுமக்குச் சந்திரனலற்பமெலிவுவரவு நீங்களதைநோக்கி யொருசொற் சொல்லவு நில்லாதென்க. (உரு.)

### இன்னிசைச் சிந்தியல் வெண்பா.

நில்லா துடல நிலையிலையென் னெஞ்சே கேள் - *
வல்லான் திருநசனை மன்னன் மருமலர்த்தா - *
ளல்லா துனக்கே தருள். - - - - - *

(இ-ள்.) நில்லா துடலமிதுவென்னெஞ்சே!கேள் வல்லமையுள்ளவன் திருநசனைமன்னவனும், அவன்வாசமலர்ப் பாதமல்லாமலுனக்குவே றருளில்லை யென்க. (உசா.)

### விருத்தம்.

அருளையளித்தானு மருளையளித்தானு மன்புபுரிந்தானுமின்புபுரிந்தானு, மருளையொளித்தானும் பொருளைதெளித்தா

னும் வாரிநடந்தானும் பூரியிடந்தானுங், கருளையறுத்தானும் வெருளைமறுத்தானுங் காவிலுறைந்தானு மாவிநிறைந்தானும், பொருளையுகைத்தானுந் தெருளையிகைத்தானும் புன்னசரற்றானு மென்னசராத்தானே. - - - *

(இ - ள்.) கிருபையைக்கொண்டு காத்தவனும் நற்கொடைகொடுத்தவனும் அன்பாயிரங்கினவனும்இன்பஞ்செய்தவனும் பிசாசைமறைத்தவனும் மெய்மையை விதைத்தவனுங் கடலினடந்தவனுஞ் செல்வவிடந்தானவனும் இருளையறுத்தவனும் அச்சத்தைநீக்கினவனும் பூங்காவனத்தி லுறைந்திருந்தவனும் ஆத்துமத்தினிறைந்திருந்தவனும் உரிமையைச் செலுத்தினவனுந் தெளிவைத்தந்துநடத்தினவனும் நீசச்சேருத்தவசுத்தமற்றவனுமென்னசராத்தானென்க. (உரு.)

மருட்பா.

தானுயிருப்பான் றனக்குநிக ரொன்றில்லாக், கோனுணசராக்குடிகொண்டான், வானுட ராவலாய்நிரையாகிபூவிரை தூவலாய்நளிர் தூவிமேலொளிர், பரத்தங்கோளை பழித்ததாளைச்சிரத்திலோகை தரித்துவாகை, மன்றலர்கொடியிவை மண்ணவர்நனிசுவை, யென்றவரொலியெழ வெம்பரனடிதொழ, மேவுநாயகன்விளங்கிய வாவிநாயக னன்படிபணிவமே. *

(இ - ள்.) தானுயிருப்பவன் தனக்கொருவர் நிகரில்லாவரசன் நசரா மாபுரியிற் குடிகொண்டவன் இவனை வானுலகத்தாராவலோ டொழுங்காய் நின்று வாசமலரைச் சொரிந் தாகாயத்திற் குளிர்ந்த வெண்கதிர்பரந்த நவக்கிரகத்தைப்பழித்த பாதத்தைத் தந்தலைமேற் பிரியமாய்த்தரித்து, வெற்றிமாலையும் வாசமலர்க்கொடியுமனிதருக்கதிகசுவையு மிவைகளென்றவர்களோசையெழப் புகன்று நமதுகடவுளின் பாதத்தைத்தொழ விரும்புநாயகன் விளங்கிய வாத்துமத்தி னாயகனன்படியைப் பணிவோமென்க. (உசு.)

சமுகவுல்லாசம்.

பணியொளிநசராயி லிறையுறைசமுகமே பகலெழிலுலாயிடலாமோ, பருமணிதனமிசைபதியரியணைமை பரமனையினிதுடனுடி, பனியினுமரிணமே படர்திருவுருவொடு பரிசுரரவைபலகோடி, யணியணிநிரைநிரை கொடிகுடைகவரியு

மடரீடவணுகுவர்கோடி, யகிலுள்புகைமுகி லெனபரவிட நறை யலருறைபொழிபவர்கோடி, யடிகுணிலநொடுமுரு டொடுமுரசமு மதிரொலியிடுபவர்கோடி, தெளியுறிபல கவிதொடை யடியசையிசை துளையுளகுழலொடுபாடி, துதி பதியதிபதியரு ணதிபதியென தொழுதடிவிழுபவர்கோடி, துணையடிமிசைமது மலரணியணியவே துறுவலினிறைபவர் கோடி, மணியணிபதமதி லிணைவிழிமருவியே மலருதடுறுப வர்கோடி, வலியுளநவசவை புகழளிகடவுளை மகிழ்வொடு நினைவுறினுமே, மனமிகையொடுபல பகையறுமுயரிய வடி வுலகணிதருவானே. *

(இ - ள்.) ஆபரணத்தி னொளிநிகராகிய நசரை மாபுரி யிற் கடவுளிருக்குந் திருச்சமுகமானதுவே, சூரியனழகை யொப் பனையிட் டுரைக்கலாமோ, பருமணிகளைப்பொன்னிற்பதித்த சிம் மாசனத்தி லமைந்த பரம பொருளை யினிதாய்நாடிப் பனியினும் வெண்மைபரவிய திருவுருவோடு பாதுகாவலாகிய வானவர் சபை பலகோடிகள், அழகுக் கழகாக வரிசைவரிசையாக விருபுறத்திற் கொடிகளுங் குடைகளும் வெண்சாமரைகளு நெருங்கியிடும் படியா யணுகிச்சேர்பவர் கோடிகளும், அகிற்கட்டை சாம்பி ராணியின் புகைகளின்மேகம்போற் பரவவிட்டு வாசமலரை மழைபொழிவனபோற்பொழிபவர்கோடிகளுங், அடிக்குங்குறுந் தடிகளைக்கொண்டு முருடுமுரசமு மற்றப்பலவாச்சியமு முழக்கு பவர்கோடிகளுந், தெளிவாய்ப் பலகவிகளைத் தொடையடி யசை யிசை வழுவாமற் றுளையுள்ள ஆதுகுழ லோடிசைப்பட்டபாடி வாழ்த்தித் தந் தலைவனென்று மரசனென்று மடுட்குடையோ னென்றுந் தொழுதவன்பாதத்தில்விழுபவர் கோடிகளும், இதன்றி யிரண்டு திருப்பாதத்திற் றேன்மலர் மாலையணியவே நெருங்கி நிறைபவர் கோடிகளும், மாணிக்க வழகாகும் பாதத்திற் றம திரு விழிகளைச் சேர்த்து மலர்வாயைப் பொருத்தி முத்தமிடுபவர் கோடிகளும், இந்தடைவாகத் திறமையுள்ள நவசபை வானவரும் புகழப்பட்ட தயைக்கடவுளை மகிழ்ச்சியோடுநினைத்து நாம் புகழ்வோமானால் மனத்துன்பமும் பலபகையும் அற்றுப்போவ தன்றி யுயர்ந்த வடிவுள்ள வானந்த வலங்காரத்தைத் தருவா னென்க.

(௨௭.)

## கன்னித்தாயிரங்கல். தாழிசை.

வானை நன்கொடையாயளித்தவன்வானை நன்கொடையாயிடான் *
வானவர்க்கொளிதந்தவன்பல வானவர்க்கொளிதந்திலான் *
சேனைமன்னவர்காணநின்றவன் றேடுமன்னவனுக்குறான் *
திருடனுக்களிதந்தவன்மறு திருடனுக்களிதந்திலான் *
மானையெய்தவன்வானுறத்திரு மானவன்னுருவாயினான் *
மான்றொடர்ந்தரசுக்கவன்மட மான்மகன்றனையீந்தனன் *
வேனையின்னுயிர் துன்பநீக்கிலா வித்தியாசமிதென்பனோ *
வென்றிபொன்னசராக்குளாதிபன் வேதவுண்ணெறிநீதமே *

(இ - ள்.) வானுலகத்தை நன்கொடையாய்க் கொடுத்தவன், அவ்வானுலகைப் பாவத்திற் சலஞ்சாதித்துத்திரும்பாமற் சாகும் பாவிகளுக்கு நன்கொடையாய்க் கொடான், வானவர்க்குப் பிரகாசமென்னும் வரந்தந்தவன், அவ்வானவர்கணங்களில் மூன்றத்தொருபங்கு தேவசித்தத்துக்கு விரோதநினைக்க வவர்க்குப் பிரகாசத்தை மாற்றிப் பேய்க்கணமாகத் தள்ளினன், படைச்சேனைகள் சூழவந்த மூவரசர்கண்டு வணங்கத் திருவுளமானவன், தன்னைக்கொல்லத் தேடும் ஏரோதை மன்னவன் காணமல் மறைந்துபோனன், இரங்கி யழுத வலப்பாகச் சோரனுக் கிரட்சணியந்தந்தவன், இடதுபாரிசச்சோரனிரந்துக்கொள்ளாததினுலிரட்சணியந் தந்திலான், மானையெய்த யிலாசி வானுல கடையும்படியாயம்மானின்மேற் செல்வ மனித னுருவாய் நின்று பேசினன், பின்னுமொரு மானைத் தொடர்ந்துபோன திறையானென்னுமரசனுக் கவன்றேவியையு மகனையுந் தந்தான், அதிகவழகுள்ளவாத்துமப் பெண்ணுகிய வென்மகள் துன்பநீக்காம லிருப்பது வித்தியாச மென்பேனே, இது வித்தியாசமல்ல, வெற்றி பெற்ற பொன்னசராக் குள்ளிருக்குந் தலைவன் வேதநீதத்துள்ள முறைமைப்படி நடப்பிக்கு நன்னெறி வழியாமென்க. (௨அ.)

## கழிநெடில்.

நீதமுறையுமறைமொழியா னிருபமருளுநியநிமல னிருபப்
படிக்குத்தவறும னினைத்துத்தேடும்பெயர்களுக்கு, வேத
முறையுமதிமுறையும் வியன்றுகடந்ததிருவேந்தை விரு
ம்பிக்காண்பிரெனவுரைத்த மெய்யாமுனையும்பொய்யாதே,
காதன்முறையாற்றேடுகின்ற கனிவென்குதையுமனங்கூரக்

கண்ணிற்காணவாராயோ கனகநசராப்புரியூரா, பாதமுறை யாற்றழுவிமுத்தம் பரிந்தேயிடுகத்தேனினிமை பருகியின் பக்கடமேறுய மருவியாட்கொண்டாளாயோ. *

(இ - ள்.) நீறியுறைந்த வேதமுறையா னவ்வேதகற்பனை களைக் கற்பிக்கு மெய்யான கடவுளின் கட்டளைப்படிக்குத் தவறாம னடந்தவனைத் தேடும்பெயர்களுக்கு வேதநெறிவழிக்கும் அறிவின் கூர்மைவழிக்கு மெட்டாதகன்று கடந்திருக்குஞ் செல்வ வரசனை விருப்பமுடன் காண்பீர்களென் றுரைத்த மெய்யான சொற் பொய்யாகாதே. இங்ஙனம் ஆசைமுறைமையாற் றேடுகின்ற வென்பட்சமுள்ள மகளு மணங்களிகூர வவள் கண்ணிற் காண வாராயோ, பொன்னசராப்புரியூரா! உனது பாதத்தை நன்முறை மையினுற் றழுவி யிரக்கமாய் முத்தஞ்செய்யவும், அப்பாதத்தி னின்பத்தேனினிமையையருந்தி யின்பக்கடலிற் றேறுயவும், தேவரீ ரொழுந்தடிமையாகச் சேர்த்துக்கொண் டாளாயோ வென்க. (உகூ.)

## சந்த விருத்தம்.

கொண்டல்முடியண்டிவளர் கொம்பர்மிசைபம்புமலர் குந்தி கள்பொழிந்துவிடவே, வண்டினமுமுண்டுமயல்கொண்டிறை மடங்கிதரை மண்ணினிற்புரண்டுறுநிதங், கண்டவர்மகிழ்ந் திவைகள் சம்புகனி யென்றணி கரங்களிலணிந்துயிருறக், கொண்டல்படவிண்டுமருள் சென்றிடவெருண்டிடுவர் கொ ன்னசராயம்புரியிலே *

(இ - ள்.) மேகந்தலையிற் பொருந்தவளர்ந்த மரக்கொம்பு களி னெருங்கிய மலர்கடேன்களைப் பொழிந்திடவே வண்டினங்க ளவையருந்தி மயக்கங்கொண்டு சிறகைமடக்கித் தரையில் வீழ்ந்து மண்ணிற்புரண்டு நித்தங்கிடக்கும் கண்டவர்மகிழ்ந்திவைகள் நாவற் கனியென்றழகிய கைகளி லெடுத்தந்த மணத்தேபாகவாயா லூது வா ரந்தக் காற்றுப்பட்டவுடனே மயக்க நீங்கிப் பறந்துபோக வவர் திடுக்கிட்டுப் போவார், பெருமையுள்ள நசராமாபுரியி லென்க. (௩௰.)

## கலித்துறை.

புரிவாய்க்கடனீ ரொடுத்துல கெங்கும் பொழிந்திடவே, *
சரிவான்குயின்கா ளுமைப்போல் விழிகள்சலஞ்சொரிந்து, *

யறியவில்லையோ, நான் றுவித்தேடும் என்னன்பை யுனக்குச் சொல்லவில்லையோ, புன்னைமரத் தினமாய் நிறைந்த சோலையே, என்கண்ணிறையப் பொழியு நீர்களானது மேகம் பொழியு நீ ரொத்தனவே, நாகணவாய்ப் பட்சியே, அன்றிற் பட்சியே, உங்க ளுக்குக் களிப்பான காலமாயிருக்கு தெனக்குச் செல்வக்களிப் பானை தில்லையே, என்னைப்போற் சிறுமைப்படுங் கேகயபட்சி யே, என்னைப்போற் சலிப்பாயிருக்கு மயிலே, பனைமரமே, சமுத்திரமே, தாழைமரமே, சங்கே, உபகாரஞ் செய்யுங்கள், என க்குப் பிரியமானவர்கள் நீங்களே, உமக்குபசாரனை செய்வா மெனக் கும்மையல்லாமலினியார், நீங்களவர்ருக்கு மிடத்தைத் தேடிப் போக வருத்தப்படுங்கள், நசரைநாயகன் வரமன்றுமிவி ரென்க.

(இளவேனிற்பருவம்வருவின் றித்தலைவனை நோக்கித்தலைவி புலம் பினதென்றறிக.) (௩௩.)

விருத்தம்.

வருந்துநெஞ்சங் குளிர்ந்திடவே வகைவேறில்லை மாங்குயில் காள், பொருந்திப்பேடையுடன்றிரியும் பொலன்றூவிய நல் லோதிமங்காள், திருந்தும்விண்ணில்விரைந்தோடுஞ்சிகரிமுந் துங்கொய்யடிகா, விருந்துநசரைநகராளு மிறையைக் கூவி யழைத்திடுவீர். - - - - - ✻

✻ (இ - ள்.) வருத்தப்படுநெஞ்சங் குளிர்ச்சியாகவே வகை வேறில்லை, மாங்குயில்களே, பெடைகளோடுகலந்துதிரியும்பொன் னிறமானசிறகையுள்ள அன்னங்களே, அழகியவாகாயத்தில் விரை வாய்ப் பறந்தோடுங் கருநாரை வெண்ணாரை மற்றநாரைகளே, நசரைமாபுரியி லிருந்தாளு மரசனைக் கூவியழைத்து வாருங்க ளென்க. (௩௪.)

தூது - தாழிசை.

கூவிநன்னசரைவாழுங்கொற்றவனைக்கொணரவானினியதூத னே, குவலயத்தினிலுதித்த நான்முதலென் கூடநிற்பதை யெண்ணுமலே, யாவியுற்றபிணிமேயா டல்கனமிகவுஞ்சிதங் கலந்தநெஞ்சதை, யன்புதப்பமெனநம்பி தூதுவிட்டவவதி யானதை யென்சொல்லுவேன், பாவிபேதை மதியால்விளை ந்த குறைபலித்த தாமிதைப்பிறர்க்கியான், பகரிற்கேட்பவர் பழிப்பதல்ல தொருபண்பிலாபமிலைமுன்னமே, மேவிபோ

னது மென்றுவிநாயக னல்வெற்றித்தோளிலருண்மாலையில், வியந்துதன்னின மகிழ்ந்து பேசவும் பயந்து செய்கருத் தழிந்ததே. *

(இ-ள்.) அழகிய நசரையில்வாழு மரசனை யழைத்துக் கொண்டுவர, வானுலகத்திலியதூதனே, நானுலகத்திற் சென்ன மாயுதித்த நாள்முதற்கொண் டென்றேடுகூட விருப்பதையென்ன ருமல், என்னுத்துமத்துக்கு வரும்பிணியோடுகூடத் துன்பமிகவு முண்டாய்க் கலந்த நெஞ்சத்தை யன்பான துணையென்று நம்பி தூதுவிட்ட வவதியானதை யென்னென்று சொல்லுவேன், பாவி நானென்னறிவில்லாப் புத்தியால் விளைந்திருந்தப் பொல்லாங்கென க்குப் பலித்ததாம்,இதைப் பிறர்க்கியான்சொல்லிற்கேட்பவர் பழி ப்பதல்லாமலொருகுணமு மிலாபமு மில்லை, முன்விருப்பமாய்ப் போன வென் னெஞ்சமான தென்னுத்தும நாயகன்நலலவெற்றித் தோளிலு மருண்மாலையிலு மதிசயித்துப் பார்த்துத்தன்னிற்றன் மகிழ்ந்தவரோடு பேசவும்பயந்து தான்செய்யவேண்டிய கருத்து மழிந்துபோனதென்க. (ருரு)

இடைச்சி-விருத்தம்.

கருட்பாவமெண்ணு மனப்பால்குடித்துக் கனத்தாவலாந் தொறுவியே, மருப்பாள்சுரப்பால் கொறிப்பாலுநாகின் மருப்பாலுடன்கொச்சையின், றெருட்பால்கலப்பா லினிப் பாகவில்லா திருப்பால் வரப்பாலுறி, லருட்பா லளிப்பால் சுவைப்பால் பொருட்பா லளிப்பானேகோனசரையான். *

(இ-ள்.) இருளாகிய பாவ முன்னிடத்தி விருப்பதை யெண்ணுமல் மனப்பால் குடித்துப் பொன்மீ தாவலாய்த் திரியு மிடைச்சியே, கொம்புள்ள பசுமாட்டுப்பாலுஞ் செம்மறியாட்டுப் பாலு மெருமையின் வாசனையுள்ள பாலும் வெள்ளாட்டின் றெளிந்தபாலுங் கலப்பாக வினிப்பாயில்லாமல் விட்டினிச்செல்வ க்குணமுள்ள கடவுளின் வரம்பெறும் பாரிசஞ் சேரிற் றயைப் பங்கு மிரட்சணியத் தூரிமையு மினிமைப் பாலாய், பொன்னுல கிடத்தையுங் கொடுப்பானே நசரையானென்க. (ருசு)

சித்து-கட்டளைக்கலிப்பா.

கோனிருந்திடு நன்னசரைக்குளே குடியிருந்துநிலைத்திடுஞ் சித்தனுன், நானிலத்துள்ளசித்தரொன்போலவே நல்லவித்தை

கள் செய்திடவல்லரோ, கானிலத்து மருந்துமில்லாமலே
கடைச்சரக்கு மில்லாமலீயத்தையே, வேணியக்குகைதன்னி
லிட்டுதிடில் விளம்பமின்றிநல்வெள்ளியதாகுமே. *

(இ - ள்.) அரசனிருக்கு நன்னசனாமாபுரியில் நிலையான குடியாயிருக்குஞ்சித்தன் நான், குறிஞ்சி முல்லைமருத நெய்தலென்னு நில நான்கினுமுள்ள சித்தரெல்லாரு மென்னைப்போல நல்ல வித்தைகள்செய்திடவல்லவர்களோ? நான்காட்டுமருந்தொன்றில்லாமற் கடைச்சரக்குங்கலக்காமல் ஈயத்தைஅதிகவிசைப்பாகக் குகையிலிட்டூதினாற் றாமதமின்றி நல்லவெள்ளியதாகுமென்க. (வெள்ளியதென்பது வெள்ளையாகுமென்றறிக.) (௩எ.)

சம்பிரதம்-விருத்தம்.

வெள்ளிவருமுன்னம் பொன்னுக்குவேனன் வேண்டியபோ
தடலும்பொன்னாக்கி யின்னங், கள்ளமன்றி யிரும்பைப்
பொற் பணமாய்ச்செய்து கனமானதராமும்பொன்னாக்கி யி
ன்னம், விள்ளுமலர்க்காவணிசூழ்நசனாபூரில் வேங்கைகளைப்
பொன்னாக்கிவைத்ததன்றி, உள்ளபசுமாடுகளைப் பொன்னாய்
நானே யுண்டாக்குஞ்சம்பிரதமோகையாமே. - *

(இ - ள்.) வெள்ளிக்கிழமைவருமுன்னாள் வியாழம், வியாழமென்பது பொன்னாகையாற் பொன்னுக்குவேனென்றான்; வேண்டியபோதடலென்னும் பொன்னாக்கிவைத்து பொய்யில்லாமற் பாம்புக்குப் படமுண்டாகச் செய்து கனமானதராமென்னும் பொன்னாக்கி, இன்னமும் மலர்ந்தமலர்ச்சோலையலங்காரஞ்சூழ்ந்த நசனாபூரில் வேங்கையென்னும் பொன்னைப் பொன்னாக்கிவைத்ததன்றி, அவ்வூரிலுள்ளபசுமாடென்னும் பசும்பொன்னைப்பொன்னாக நானேயுண்டாக்கும் வித்தைபிரியமாமேயென்க. (௩அ.)

வெண்பா.

கைப்புப்புளிப்புத் துவர்ப்புறைப்புத் தித்திப்பாஞ் - *
செப்புங் கொலைகாமஞ் செய்களவுந் - தப்புள்ள - - *
பொய்முரணுமாசைப் புகாகலநன்னசனா - - *
மெய்முதல்வனைப்பணிகுவீர். - - - - *

(இ - ள்.) கைப்புப்புளிப்புத்துவர்ப்புறைப்புக்கரிப்புத் தித்திப்பென்னும் அறுசுவைக்கிணையானபாவங்களாவன, கொலையுங் காம

முஞ் செய்யுங்களவுங் குற்றமுள்ள பொய்யும் பகையும் ஆசையு மென்னும்பாவங்களகல நன்னசராயில்வாழு மெய்யானகடவுளை வணங்குவீர்களென்க. (௩௯.)

தாழிசை.

வீரம்பொருந்தியநீதனர் வேழ்வி பொருந்தியவேதனர் *
நாரம்பொருந்தியபோதனர் நன்னசராப்புரிநாதனர் *
வாரம்பொருந்துறைபோதனர் வானமிர்தம்பொழிசீதன *
ராரம்பொருந்தருணதன ராறுதறந்திடுபாதனர் *

(இ-ள்.) வீரியம்பொருந்திய நீதனனவர், தேவபூசைக்குப்பொருந்திய வேதம் அருளினவர், அன்புபொருந்திய குருவானவர், நன்னசராப்புரித்தலைவனனவர், நாடோறுநடக்குமுறைமையைப் படிப்பிக்குமுபாத்தியானவர், வானுலகமிர்தத்தைப்பொழியுங்குளிர்ந்தசந்திரனனவர், முத்தாபரணமாகவருளைத்தரித்த கடவுளானவர், சகலருக்கும் ஆறுதலைத்தரும்பாதமுள்ளவரென்க. (சഠ.)

விருத்தம்.

பாதகந்தனை மறுத்திலை பொறுத்திலை பரந்திடுநினைவினை
நிலைத்துப், போதகந்தனையிறுத்திலைபொறுத்திலை புண்ணிய
நெறியினிடக்கச், சாதகந்தனையுறுத்திலைநிறுத்திலை தவமுற
நெஞ்சமேயினிநீ, மேதகம்பெறக்குறித்திடு பொறித்திகழ்
மெய்நசராயினிறைக்காவே. - - *

(இ-ள்.) பாதகத்தைப்போக்கவில்லை, அதைவெறுக்க உன்னை வருத்தஞ்செய்ததில்லை, பரவித்திரியுமுன்னினைவை நிலையாக நிறுத்தி ஞானங்களைச்சொல்லவில்லை, அந்தச்சுமையையதின்மேற்சுமத்தவில்லை, அதைப் புண்ணியவழியினடக்கச் சாதகப்படுத்தவில்லை, அதைச்செவ்வையாக்கவில்லை, நெஞ்சமே, இனிநீதவத்தைக்கொண்டு மேன்மைபெறச் செல்வம்விளங்கிய மெய்யான நசராயரசன்றயையின்சோலையை நினைத்திடுவாயென்க. (சக.)

அம்மானை.

காவணிசூழ்பொன்னசராக்காவலனுமெய்யானல் *
தேவனுடன்மாந்தனென்றாய்ச்சேர்ந்தனன்காணம்மானை, *
தேவனுடன்மாந்தனென்றாய்ச்சேர்ந்தனனென்றாமாகில் *
மேவலர்கைக்குள்வருந்திவீவதேனம்மானை, *
வீசெகுப்பவீந்தன்னைவீயாதுயிர்த்தானுமாகில் *
தேவனுமே மாந்தனுமாய்ச் சேர்ந்தனன்கா ணம்மானை *

(இ - ள்.) ஒழுங்குள்ள சோலை சூழ்ந்த பொன்னசரைமாபுரிக்கரசன் மெய்யானதேவனு மெய்யானமனிதனு மொன்றாய்ச் சேர்ந்தவன்காண் அம்மானை, அத்தன்மைத்தா யவ்விரண்டுமொன்றாய்ச் சேர்ந்தவ னென்றதாமாகிற், பகைவர் கைக்குள்ளகப்பட்டுச் சாவதேன் அம்மானை, மானுடர்செய்தபாவமென்னு நித்தியசாவைத் தான்கொல்லச் செத்துச்சாகாம லுயிர்த்தெழுந்தா னுகையால் மெய்யானமனிதனு மெய்யானதேவனு மொன்றானவன்காண் அம்மானையென்க. (சஉ.)

வெண்பா.

அம்மானமராட வாங்கிறம்பொ துங்கிவென்ற - - - *
அம்மானன்றவீதையன்பாய்த்தன்-னம்மானைக் - - *
கொண்டுநிலைமகவாய்க் கூவோர்புகழவந்தான் - - - *
பண்டுநசரைப்பதி - - - - - - *

(இ - ள்.) தாவீதனம்மானாகிய சவுலோன் தாவீதன்மேல் யுத்தஞ்செய்ய மலையின்மேற்போய் மறைந்திருந்தவனைவென்ற வந்தவரசர்க்கரசனானவனை யன்பாகத் தன்றகப்பனாகக்கொண்டு தானவனுக்கு நிலையானகுமாரனாகப் பூவுலகத்தார் புகழும்படியாக வந்தான், அவனாரோவென்னில்நசரைமூதூர்நாயகனென்க. (சஙு.)

வஞ்சிவிருத்தம்.

நசரைப்பதி நாயகனைத்தினமும், நிசவுற்பன மாகநினைத்தவனற்
றசகற்பனைதன்னினடந்தவர்வா,னசனத்தையருந்துசுகம்பெறுவார்

(இ - ள்.) நசரைப்பதிநாயகனைத் தினமு மெய்யானநினைவாக நினைத்து அவன்நல்லபத்துக்கற்பனையி னடந்தவர்கள் வானுலகத்தின்போசனத்தை யருந்துஞ்சுகம்பெறுவாரென்க. (சச.)

வஞ்சித்துறை.

வாரிக்கடனிகர், பூரித்தரவல - - - *
னேரினசரையி, னூரினமலனெ - - *

(இ - ள்.) நீர்க்கடனிகராய்ச் செல்வந்தரவல்லவன் இணையில்லாத நசரையூரிலிருக்குங் கடவுளென்க. (சரு.)

கழிநெடில்விருத்தம்.

அமலம்பரந்தகலைமுகமு மாம்பணிகருந்தேன்வாயும் *
அருளார்கண்ணீலோற் பலமுமமைவிற்புருவும்பிறைநுதலும்

சிமிலம்பரந்ததிண்புயமுந் தெருளாரருளின் றெரியன்மிகத் *
தேக்கவுறைந்த மணிமார்புந் திருவெண்மலரின் மேனியதுங் *
கமலம்பரந்தபொற்முளுங் காண்டற்கரியகவின்கொண்டு *
கனகநசரைப்புரிதன்னிற் கனிவாயிருக்குங்காவலனை *
விமலம்பரந்துநான்வாழ்க விழியாலின்றுகாண்பேனல் *
விண்வேறுண்டோ வெனக்கிதுதான் மேலாநயமுநிறைதடமே.

(இ - ள்.) அழகுலாவிய சந்திரமுகமுந் தேன்பொழியுமாம்பற்பூநிகரும் வாயும் அருணிறைந்த கருங்குவளைக்கண்ணும் வில்லொத்த புருவமும் பிறைபோல்வளர்ந்தநெற்றியு மலையோடொத்தவலியதோளுந் தெளிவுள்ளஅருள்மாலை யதிகநிறைவா யுறைந்த மணிமார்பும் வெண்டாமரையொத்த திருமேனியுந் தாமரைமலரொத்தபொற்பாதமுங் காணரியவழகைக்கொண்டு பொன்னசரையி லன்பாயிருக்கு மரசனை நான்மாசற்றுவாழ்க என்கண்ணுலின்றுகாண்பேனுகில் மோட்சம்வேறுண்டோ வெனக்கிதுதான் மேலானநன்மைநிறையும்பெருமையென்க . (சகா.)

தாழிசை.

தடமுண்முண்டகங்களே மடலுண்முண்டகங்களே *
தளிரின்பலனிசோலையே களிறின்பொலிவுமாலையே *
யடர்புகுண்டிவிருணமே தடமுவர்த்தவருணமே *
யறலுறைந்தபாரியே யறலுறைந்தவாரியே *
கடலிலூருசங்கமே யடலிலாருவங்கமே *
கரையிலோடுமலவனே விரைவிலோடுமலவனே *
இடரெனக்கிம் முறையெலாந் திடமுமக்கிங்கறையலாம் *
எவு நசரைமன்னன்மே லாவிநசையையுன்னலே. *

(இ - ள்.) வழியிலுள்ள முள்ளுச்செடிகளே மடலுள்ள தாழைகளே தழைநிறைந்தகோங்குமரச்சோலையே மதயானையினுமிருண்டவந்திநேரமே நெருங்கியபாத்தியுள்ளவுப்பளமே குளத்திலுள்ளவுவர்த்தண்ணீரோ கருமணலுறைந்தகடற்கரையே தண்ணீருறைந்தசமுத்திரமே கடலிலூருகின்றசங்கே அலைபோடுபொருந்தியகப்பலே கரையிலோடுநண்டே தீவிரமாயோடுஞ்சந்திரனே, எனக்குள்ள துன்பத்தின்முறைமையெல்லா முண்மையா யுமக்கிங்கேசொல்லலாம் என் வருத்தமானது நசரைநாயகன்மேலென்னுத்தமமாசையைக்கொண்டு நினைத்திருக்கிறதென்க. (சஎ)

பாணன்-மட்டவிருத்தம்.

உன்னரும்பொருளினையுன்னியும்பர்கள் - - - - *
பன்னரும் புகழ்நிதம்பாடிப்பார்த்திய - - - - *
மின்னருநசரையின்வேந்தேபாணனே - - - - *
மன்னரும்பயனுறமகிழ்ந்துபாடுவாய். - - . - *

(இ - ள்.) நினைக்கரும் பொருளை நினைத்து வானவர்கள் சொல்லரும்புகழ்ச்சியை நித்தம்பாடி வணங்கிய அரிய வொளியுள்ள நசரைக்கிறைவனே - பாணனே நிலையான பயன்பெறும்படியாய் மகிழ்ந்து பாடுவாயென்க. (சஅ.)

நிலைமண்டிலவாசிரியப்பா.

பாடுறுகொடுமிசைப்பாரிடம்விடுத்து - - - - *
சூடுறுநரகச்சோகினைவென்று - - - - - *
வீடுறீஇநானும்விழைவதெக்காலமோ - - - - *
நீடுறுநசரையினிலையுள்ளவள்ளலே - - - - *

(இ - ள்.) கேடுள்ளகொடியதுன்பவுலகத்தைவிட்டுத்தீநரக பிசாசைவென்று பரமவீட்டிற்சேர்ந்துநானுமாசையோடிருப்பதெக்காலமோ ? எக்காலமு நிலையாயிருக்கும் நசரையின்வள்ளலே யென்க, (வள்ளலென்பது மட்டில்லாமற் கொடுப்பவனு மென்றறிக.) (சகூ.)

கலித்துறை.

வள்ளலுறையுந்திருநசராபுரிமானினியா - - - - *
ருள்ளிலுறைகற்பணிக்குநிகரிலவொண்முகத்தைத் - - *
தெள்ளலுறையினன் காணப்பொறாமையிற்றேய்வன்கண்க *
ளுள்ளணிக்கம்புகயறாணிநீரிலொளித்தனவே - *

(இ - ள்.) வள்ளலிருக்குந் திருநசரைமாபுரியில்வாழு மாதருள்ளத்திலுள்ளகற்பழகுக்குக் கொருபொருளுநிகரில்லை, விளங்கிய வவர்முகத்தைத் தெளிந்ததண்கதிருள்ள சந்திரன்பார்க்கப்பொறாமையினாற் றேய்கின்றனன். அவர்களுக்குள்ள அழகைப்பார்க்கமாட்டாமலம்புகள் அப்புறாதூணியிலு மீன்கள் தண்ணீரிலு மொளித்திருப்பவாமென்க. (ருய)

விருத்தம்.

ஒளிமிகுமுகத்தான் களிமிகுமகத்தானுயருலகத்தான்செயிருலகிற்ற,னளிநிழற்குடையா னளிநிழற்கொடையா னுதரவுள்

ளான் போதரவுள்ளான், றுளிநிகர்கரத்தானளிநிகர்வரத்தான்
சுந்தரவுருவான்மந்திரத்திருவா, னளிக்கடனயத்தானளித்துவ
னயத்தானசரையின்வேதனசலநன்றுதன். - - - - *

(இ - ள்.) ஒளிமிகுத்த முகமுள்ளான் களிப்புமிகுத்த மனமுள்ளான் வானுலகத்தான் உலகின்பாவத்தையறுத்தவன் குளிர்ந்தவருட்குடையான் அன்புஞ் செல்வமுங் கொடையாயளிப்பவன் ஆதரவுள்ளானதிருத்தியுள்ளான் மழைத்துளிபோனலம்பொழியுங்கையான்தேனிகர்வரமுள்ளவன் அழகியமேனியானவன்திருமந்திரமானவன்அகன்றகடற்போனன்மையுள்ளவன் மாட்சிமைநிலையானவன் நல்லவன்நசரையின்வேதன்அசையாமலையோடொத்தநாயகனென்க. (௩௧.)

அகவல்.

நன்னறவுமிழ்ந்த நறைமலர்ச்சோலையில் - *
அன்னியம்பாட வழகியசிகண்ட - - - *
மயிலினமாட வண்டியாழியம்பப் - - - *
பயிலிடப்பூவைபற் பறவையொத்திசைப்ப *
மருவியவணிசூழ் வளம்பெறுநசரையிற் - *
றிருவியனிலகுந் தேசுறுநாதன் - - - - *
விண்மீதபிநவம் வேய்ந்திடவுதித்த - - - *
தண்மீன்றனக்குத் தகைவிருதணிந்தோன் *
வெற்றிவாகை விளங்கியகரத்தான் - - - *
பெற்றிவாய்மை பெருகியநலத்தான் - - - *
வானவர்கோனவர் வையகத்துள்ள - - - *
மானவர்பல்லுயிர் வணங்கியபதத்தான் - - *
அளியருண்மாலை யணிந்திடுமார்ப - - *
னொளியுளமேக முயர்வாகனத்தான் - - *
மன்னுயிர்துன்ப மாறிவாழ்ந்துய்யத் - - *
தன்னுயிரளித்த சச்சிதானந்தனை - - - *
என்றுளத்தகத்திலினிநீர் - - - - *
நன்றணியணியவே நாடுமின்பலையே - - *

(இ - ள்.) நற்றேனுமிழ்ந்தவாசமலர்ச்சோலையிற் குயில்கள் பாடவு மழகுதோகையைவீசும் மயிலினமாடவும் வண்டினங்கள் வீணைவாசிக்கவும் நாகணவாய்ப்பு ள்ளுப் பதஞ்சொல

லிப்பாடவும்பலபறவைகளிவைக்கொத்திசைகள்பாடவும் இவ்வகை யலங்காரஞ்சேர்ந்த சோலைசூழ்வளமைபெற்ற நசரைமாபுரியிற் செல்வப்பெருமையிலங்கவமைத்தவழகியநாயகன், ஆகாயத்தி னவ மாயுதித்த குளிர்ந்தநட்சத்திரத்தைத் தனக்குப் பெருமையுள்ள விருதாயணிந்தவன் மாருதவெற்றிக்கொடியை விளங்கியகையிற் றரித்தவன் நற்குணவுயர்ச்சியிற் பெருகியநலத்தான் வானவரரசர் பூவுலகத்திலுள்ள மானுடர்மற்றப் பலசராசரங்களும் வணங்கிய பாதமுடைத்தானவன் மதுநிகருஞ்மாலையை யணிந்தமார்பன் மின்னொளியுள்ள வுயர்மேகவாகனத்தான் மனிதராத்துமப்பிணி நீங்கிவாழ்ந்து பிழைக்கத் தன்னுயிரைத்தந்த கடவுளை என்று மினிமே லுங்கள்மனதினி னன்மைமாலையாக வணிந்துகொள்ளத் தேடுங்கள் அந்தவின்பச் சமுத்திரத்தையென்க. (௫௨.)

விருத்தம்.

அலையுவரற்றிடவும் அலைகளமர்த்திடவு மருணனிலைத்திடவும்
வருணமொளித் திடவுங், கலைமறைவுற்றிடவும் பகலிரவொத்
திடவுங் கங்குலிலேயிரவி கண்டிடநின்றதுவு, மலையினுயிர்த்
தருளுமகிழ்நசரைத்தலைவன் வரமுளர்செய்வார்மன் வலியுள
வற்புதம்மோ, கலையுயர்கர்த்தனையே கருதியிறைஞ்சுவிரோற்
கனமுமியற்றியுநீர் கதியொளிமுற்றடைவீர் *

(இ - ள்.) கடனீருவரற்றுப் போகவும் அலைகளெழும்பா மலமர்த்திப்போடவும் சூரியனடையின்றி நிலையாகநிற்கவும் மேக மழைபெய்யாம லொளித்துப்போகவுஞ் சந்திரன்மறைவாகவும் பகலிரவோடொத்திருக்கவும் இரவிலே சூரியன்காண நின்றதுவும் பெத்திலேயமென்னுமலையிற் பிறந்த மகிழ்ச்சியான நசரைநாய கன் வரம்பெற்றவரிவ்வையெல்லாஞ்செய்வார். இவைகளதிகபலனுள் ளவதிசயமோ! கல்வியிலுலளவிலெட்டாதுயாந்த கர்த்தனை நீங்கள் நினைத் தேகமனமாய் வணங்குவீராகிற் சொன்னவிதங்களி லதிக மாய் நீங்களுஞ்செய் தொளியானந்த மோட்சத்தை முற்றுமடை வீர்களென்க (௫௩.)

விருத்வம்.

அடைந்தவருட்டிரு வாசகமே அழிவிலபேருறை வாசகமே, *
மிடைந்தநலங்கொளுமாதிரமே மேதினியோர்நிலை மாதிரமே,
உடைந்தவுளைத் தருமாதரமே யுண்மைவரந்தருமாதரமே, *
முடைந்துவணங்கியதேசிகனே முன்னசரைப்புரிதேசிகனே *

(இ - ள்.) நானடைந்த வருளின்திருவாசகமே அழியாப் பெருமைநிறைந்தவாசனையே யிடைந்தநன்மையைக்கொண்டபரமகதியே பூவுலகத்தோர்நிலைத்திருக்குமலையே தளர்ந்தமனதுக்காதரவே மெய்யானவரத்தைத் தருமாசையே நினைத்துவணங்கிய வுபாத்தியே பழமையாகிய நசரைமாபுரிக்குருவேயென்க. (௫௪.)

பஃறொடைவெண்பா.

தேசிலங்குநன்னசரைத் தேசிகனுமிவ்வுலகின் - - *
காசிடரைமாற்றிக்கனத்தவரம்பொழிந்து - - - *
நேசமுடன் மைந்தருக்கு நீதிநிறைசுகிர்தம் - - - *
வாசமுறுந்தவத்தின்வாய்மை முறையுறுதி - - - *
ஞானந்தயைதாழ்ச்சி நட்புறவு நற்பிரியந் - - - *
தானம் பரிவு சமாதானம் பட்சமுடன் - - - *
வண்மையிரக்கமனவூக்க நல்லொழுக்க - - - - *
முண்மைபொறை கற்பு மோங்கவளித்தினிமே - *
லித்தடத்தி லேநடப்போ ரென்கதியிலென்றேடு - *
நித்தியமும்வாழவார் நிலைத்தென்று - னத்தடத்தை - *
யுத்திதனிலோயாம லுன்னியியற்றிகதி - - - *
உத்தியடைவோமுவந்து - - - - - *

(இ - ள்.) ஒளிவிளங்கு நன்னசரைக்குருவு மிவ்வுலகின் பாவத்துன்பத்தைமாற்றி நிறைந்தவரத்தைப் பொழிந்து நேசமாய் மானுடருக்கு நீதியுநிலையுந்தருமமும் வாசமுள்ளதவத்தினுயர்ச்சியு நன்முறமையு முறுதியும் ஞானந் தயை தாழ்ச்சி சினேகம் உறவு நற்பிரியந் தான மன்பு சமாதானம்பட்சம் புகழ்ச்சி இரக்க மனத்தைரியம் நல்லொழுக்கம் மெய்மை பொறுமை கற்பு மோங்கத்தந்தினிமே லிவ்வழியிலென்றேடு நித்தியகால நிலைத்து வாழ்வாரென்றான். அவ்வழியைப் புத்தியிலோயாமல் நினைத்த கருமங்களைச் செய்து பேரின்ப செல்வத்தை மகிழ்ந்தடைவோமென்க. (௫௫.)

விருத்தம்.

உவப்பாக வெனைத்தேடி வந்தகோவே, யுயர்நசரைப் பதியில்குடி யுறைந்ததேவே, தவப்பேறே யென்றாலே யுனக்கிலாபந் தானுண்டோ வுண்டெனி லுனையென்றும,

லவச்சாபாதகங்களானிந்தை சொல்லி யவமானப்படுத்திய
டித்தறைந்துகொன்றே, னவப்பான்மையாலென்றன்கருணை
தந்தாய், நண்ணியவித் தயைகண்டு நண்புற்றேனே *

(இ - ள்.) மகிழ்வாயென்னைத்தேடி வந்தவரசனே உயர்ந்த நசரைமாபுரியிற் குடியிருக்குந்தேவனே, தவத்தின்பயனே என்னாலே யுனக்கிலாபமுண்டோ வுண்டு; அஃதென்னவெனிலுன்னையெண்ணாமற் சாவானபாவங்களா னிந்தைகளைச்சொல்லி யவமானப்படுத்தியடித்துச்சிலுவையிலறைந்துகொன்றேன், இதுவே யுனக்குக்கிடைத்தவிலாபம் உனதுசினேகக்குணத்தினாலென்றுமெனக்குனது கருணைதந்தாய். உனக்குள்ளே யிந்தத் தயையைக்கண்டுன்னைச் சினேகித்தே னென்க. (௩௫.)

தழைக்கலித்துறை.

புத்தியதாகு நற்றோழியேகேளிப் பரிதழையோ - - *
மத்தியமண்ணோர்க் குயிராங்கனியின் மரத்தழையோ - - *
வத்தியமாம்பவ மீளச்சுமந்த வகத்தழையோ - - - *
சத்திநசரைப் பதிவீதழைவிலை தானிலையே. - - - *

(இ - ள்.) புத்தியதாகுமென் னல்லதோழியே சொல்லக்கேளிந்தவன்பென்னுந் தழையானதுவே நடுவுலகத்தி லுண்டாக்கப்பட்ட வாதிமாந்தற் குயிரைத்தந்த கனியின்மரத்தழை யென்பவோ அல்லது அளவிலலாதபாவத்தைமீட்க வாண்டவன் றோளிற் சுமந்த தழையென்பவோ விருதுக்கொடியுள்ள நசரைமாபுரி நாயகன் றந்தவித்தழைக்கு விலையில்லையென்க. (௩௬.)

காப்பியக் கலித்துறை.

இலையெனுமன்பி னிலையெனுமெந்த னிடமாகச் - - *
சிலையெறியைம்பூங் கணையின்முறிந்தான் செயிரொன்னு - *
மலையெரிமங்கிக் கலிவலியெஞ்சி மறைவானக் - - *
கலையெழினசரை நிலையமுறுங்கோன் கரமாலே - - *

(இ - ள்.) இலையென்னும்பெயரா யன்பான தென்னிடத்தினிலையா யமையக் கருப்புவில்லிற் றுமரைப்பூ அசோகம்பூ மாம்பூமுல்லைப்பூ வேளைப்பூவென்னும்ஐ ந்தம்பைத்தொடுத்தெய்யுமன்மதன்முறிந்தோடினான். என்னுள்ளத்திற் பாவமான்று மலைநிகராயுயர்ந்தெரிந்தவக்கினி யவியப்பட்டதுவஞ்சகத்தின்பெலன்குறைந்து மறைவாச்சுது பூரணச்சந்திர னழகாயிலங்கிய நசரைமாபுரியின் கோயிலிலிருக்குந் தலைவன் திருக்கரத்தின் வல்லமையாலென்க. (பாவத்தைவெறுத்த கருத்தைக் காண்பித்ததென் றறிக.) (௩௮.)

சந்த விருத்தம்.

கரவாகிடுமென் கறையானதுவே - - - *
பரிவாகிடுமின் பரிவானலமே - - - - *
விரவாகிடுமென் வியன்மாநசரை - - - *
வரவாகிடுமென் வளமேலிடமே. - - - - *

(இ - ள்.) என்பாவமென்னை விட்டொளித்துப்போகுமே, ஒளிபரவிய நலமென்னோ டேகரித்திருக்குமே, பெருமைநிறைந்த நசரைக்கிறைவ னென்னிடத்தில் வருவான்எனக்கின்பமு மழகையுந்தரவேயென்க. (௫௬.)

விருத்தம்.

மேவியநன்மை விளைந்தருடாதைக் - - - *
கேவியன்முற்பிணை யீந்தமுறைக்காய்ப் - - - *
பூவினுதித்தணி பொன்னசரைத்தா - - - *
ஞவியளித்தன ஞவிதனக்கே. - - - - *

(இ - ள்.) விரும்பிய நன்மை யெல்லாம் விளைந்திருக்கும் பிதாவாகிய சருவேசுரனுக் கியல்பாய்த்தான்முன்பிணை கொடுத்த முறைமைக்காகப் பூவுலகத்திலுதித்த வழகிய பொன்னசரைத்தானு கியகடவுள்தன்னுயிரைக் கொடுத்தார் மனுவுயிருக்கென்க. (௫௭.)

விருத்தம்.

தனத்திடத்தினிற் குயிற்றிய தகைமணிபோன்றே - - *
மனத்திடத்தயை வதிந்திடு நசரையின் வள்ளல் - - - *
சினத்திடுங் கொடும் வெறிகளைச் சிதைந்து நன்னயனைக் *
கனத்தினீரெனப் பொழிந்தனன் காசினி யோங்க - - *

(இ - ள்.) பொன்னிற் பதிக்கு மழகிய மாணிக்கத்தைப் போலமனதினிற் றயைக்குடி கொண்ட நசரையின் வள்ளல் பூமிவுள்ளகொடிய பேய்களைக் கெடுத்தழித்து நன்மைகளை மேகம் பொழியுநீர்போலப் பொழிந்தான் பூவுலகமுய்யவியாக வென்க.

மறக்கழிநெடில்.

ஓங்கதிரு முகங்கொணர்ந்த தூதாசெந்தீ யுடலுக்கோமறவரி ளம் பிடியைக் கேட்டா - யீங்கயமோவிரு மருப்புங் கையு மெங்கே யித்தவிளம் பிடிக்குமுகத்தொருகை வாலும் - யா ங்சகன்ற விருசெவியு நாற்காலில்லைப் பாசடையார் வனஞ் சிலம்பிற் பார்த்தாலுண்டாந் - தீங்கறுநன் னசரைப்பதி யா ளுந்தேவன் றிருத்தயையி னிலைமைபெற்றதிறத்தோராமே.

(இ - ள்.) அரசன்றிருமுகங் கொண்டுவந்த தூதனே யவன் றிருமுகத்தை யிங்குகொண்டுவந்து வைத்தாயாகி லங்கிருக்கு முயி ரில்லாப் பிரேதத்துக்கோ மறவர்பெண்ணைக் கேட்டாய் இப்படி நீ கேட்டதல்ல ஓங்கலென்பது யானைக்கு மிளம்பிடி யென்பது பெண்ணி யானைக்கும் பயனுகையி லரசன்றன் யானைகொரு பெண்யானையைத் தேடச்சொன்னால் நீ யதின்பயனறியாம லிங்கு கேட்கவந்தா யப்படித்தா னிது யானைமுக மென்றாலிம்முகத் திர ண்டுகொம்புந் துதிக்கையு மெங்கே யெங்கள் பெண்ணுக்கு முக த்திலொரு துதிக்கையும் வாலுமிருபக்கமு மகன்றவிருகாது நாற் காலு மில்லை, பச்சிலை நிறைந்தவனந்தாத்திலு மலையிலும் போய்ப் பார்த்தா லகப்படும், நாங்கள் குற்றமில்லாத நன் னசராமாபுரியை யாளுந் தேவன் திருத்தயையின் பெருமைபெற்ற திறமை யுள்ள வராமென் றறிவாயென்க (திருமுக மென்பதுஓலைச் சுருளுமா மென்றறிக.) (கூஉ.)

தாழிசை.

திறம்படித்து வந்துவார்த்தை செப்புகின்றதூதனே – செ த்தவோலைதனை யெடுத்துச்சிற்றிரும்புகொண்டிரு – புறம்வகு த்து சிரமும்பின்னும் போக்கிக் கூரிரும்பினாற் – பொறித்த லாகக்கீறிவைத்தபுனையும் விளையஞ்செல்லுமே – மறம்பிடித் தவரசர்மறவர் மங்கைமீதுமாலினால் – மாண்டுநிரையம் வாச லாசுமரமதாகநிற்கிறா – ரறம்பலிக்கு நசரைநாத னல்ருமம் புயத்திணை – யடியி னடிமை யாளனொன் றறிந்திலாது கேட் பையோ. *

(இ – ள்.) திறமையாய்ப் பேசக்கற்றுக்கொண்டுவந்து வா ர்த்தை பேசுகின்றதூதனேகேள், செத்தவோலையை யெடுத்தொரு சின்னவிரும்பைக்கொண் டிருபுறமும் வகிர்ந்து தலையும்பின்னுந் தறித்துக் கூரிரும்பினாற் புள்ளிப்பொறியாகக் கீறிவைத்துக் கட் டியவலையை யிங்கேசெல்லுமோ பாவத்திற்பிடிப்பாயிருந்த வர சர்பெண்ணின்மீதாசையாயிருந்து செத்துநரகவாசலிலவர்க ளரசு மரமாய்க்கிடந்து வேகிறார்கள். தருமப்பயனுகைநசரை நாதன் மல ர்ந்ததாமரையிணை பாதத்தினடிமை யானவனொன்றறியாமற் கேட் பாயோவென்க (கூா.)

விருத்தம்.

கேழ்வாயின் பொற்கதவங்கெழுமைபெறுமா நசராக்கேழ் வனல்ல, பேழ்வாகும்பிழிமலர்த்தாள்பெட்புறவேசிரத்திலணி பெற்றியார்கள், தாழ்வானகுலமெனினு மருவருப்பாம்பிணி யெய்தித் தளர்வரோனும் வாழ்வானவானுலகின் வானவரொத் திருக்குமுயர் மாண்புள்ளாரே. *

(இ - ள்.) ஒளிவாசலிற்பொற்கதவினு லழகுபெற்றிலங்கிய நசராமாபுரித்தலைவன் நல்லபெருமையும் வடிவமுமுள்ள தேன் பொழியுமலர்ப்பாதத்தை யாசையோடுதலையிலணிந்துக்கொண்ட நற்குணத்தார் தாழ்வானகுலமென்றாலு மருவருப்பானநோயுண் டாகித் தளர்வாரேயாயினும் வாழ்வானவானுலகத்தில் வானவரோ டொத்திருந்துவாழு முயர்ந்தபெருமையுள்ளாரென்க. (௬௪.)

விருத்தம்.

புள்ளார்ந்துவக்குமிருணிழற்காப் பொலிமாநசராக்குடிமே வுந், தெள்ளாமறையின்வடிவான திருவாலயமுன்வாவியினிற், கள்ளார்கமலங்கடியாம்பற் கடவுடாய்கண்டிருபொழுதுந், தள்ளாமலருமவளணிந்தபன்னவிதுவுள்ளொளிக்கென்றே *

(இ - ள்.) பட்சிசாதிகளிருந்துகளிக்கு மிருணிழற்சோலை யைச்சேர்ந்த நசராமாபுரியிற்குடியிருக்குந்தெளிந்தவேதவடிவா னகிய கடவுளின் திருவாலயத்தின் முன்னிருக்குங்குளத்திற் றே னிறைந்த தாமரையும் வாசமுள்ளவாம்பலு மிக்கடவுடாயான கன் னிமரியுங் கோயிலிலிருப்பதைக்கண் டிரவுபகலென்னு மிருபொ ழுதுந்தள்ளாமல்மலரும் அவளணிந்தசூரியனுஞ் சந்திரனுளிக்கா யென்றுமென்க. (தாமரைக்குச்சந்திரனுமாம் பலுக்குச்சூரியனு மாகாமற் கூம்புமென்பதா லிவ்விடத்தி லவ்விரோதமின்றிமலரு மென்பதாமென்க.) (௬௫.)

குறம்-தாழிசை.

என்றுமுனக்கொரு துன்பமுமெய்தில மெய்சொல்வே னம் மையே, என்றன் மகன்றலைக்கெண்ணைவா ரிடையனுமென்ற னக்கொன்றளி, நன்றனுளத்திறநன்றதாய் கண்டனமுகக்குறி தன்னிலே, நன்றணியின் னசராப்பதி நாதனை நாடிய நம் பலே.

(இ - ள்.) எப்பொழுது முனக்கொரு துன்பமும் வாராத மெ ய்யைச்சொல்வேனம்மையே யென்மகன்றலைக் கெண்ணைவாரொன க்கொருபழம்பிடவைகொடுவுன் மனதி லுள்ளவிசாரத்தை நன்று

யுன்முகக்குறியிற்கண்டேன் அதென்னவெனில் நன்மையாபரணத்தைத்தரித்த வொளிநசரைமாபுரி நாயகனைத்தேடிய பேராசையாமென்க. (௩௯.)

விருத்தம்.

நம்பன்மிக வுங்கொண்டக நலிவெய்துயிர் மின்னே நாளைக்குன தன்பாகிய நசரைப்பதி நாத, னும்பர்க்குழு வும்பின்னுற வொளிதேர் மிசைவந்தின் புறவாடியிருப்பானீ யொருமித்துயிர்வாழ்வாய், வம்பற்புகழ் மல்கத்திரு மன்றற்புரிவானீ மருவித்துவ மகிழ்சற்பிர சாதக்கருவாவாய் நம்பிக்கொளுமென்வாசக நல்கு மிதுநியமே நடவாதெனிற் குறிநான்சொல நாடெங்கினுநாடேன். *

(இ - ள்.) ஆசைப்பெருக்கங்கொண்டு மனமடிவாகியவாத்துமமென்னும்பெண்ணே! நாளைக்குனதன்பாகிய நசரைமாபுரிநாயகனை வானோர்கூட்டங்கள் பின்சூழ்ந்துவரக் கதிரொளித்தேரிவந்தின்பமா யுறவாடியிருப்பான் நீயவனோடொருமித்துயிர்வாழ்வா யெண்டிசையும்புகழுண்டாக வுன்னைத்திருமணஞ்செய்வான் நீயவனன்மையிற் சேர்ந்து நிலையானமகிழ்ச்சிகொண்டு தேவசற்பிரசாதக்கருவாவாய் இதைநம்பிக்கொள்ளென்சொற்படி யுண்டாகுமிதுநிச்சயந்தானே நான்சொன்னபடி நடவாவிட்டா லினிமேல் யான்குறிசொல்ல வொரு நாடெங்கினு நாடேனென்றுளென்க. (௩௭.)

வஞ்சிப்பா.

நாடுநன்னிலைநன்கது நீடுநல்கருணைநிழலும் - - - *
பாரோர்க்கதிபகிர்ந்தளிப்ப நேராகியநெடுந்தருவார் - *
கான்வீசியகடியலரிற் றேன்வீசியசினைநிழற்று - - *
நயமேவிய நசரைத்திரு வியன்மானகரெய்தினனே - - *
யெய்தியபின் றீதார் வன்றுயர்தேயப் பொன்னிணைப்பாதாம்
போருகப்பண்பாய்நானே, மருவியென்னிருவிழி மலரினிற்
பூண்டாற் றெருடருமொளிவுறுந்தின்ற மருதருமமுதமு
மாறுவின்பமே *

(இ - ள்.) தேடுஞ்சுகநன்மையும் விரிவாந்தயைநிழலும் பூவுலகத்தார்க்கதிகமாய்ப் பங்கிட்டுக்கொடுக்க வொழுங்காய் நீண்டமரநிறைந்தசோலையின் வாசம்வீச, மலரிற் றேன்றருங்கொம்புகளா னிழலைச்செய்யு நன்மைபொருந்திய நசரையென்னுஞ் செல்வமானகரிற் சேர்ந்தனனே, சேர்ந்தபின்னர் பாவமிகுதியால் வி

ளாந்தபலத்த துன்பந்தேய, வவனிணைப்பொற்றுமரைப்பாதத்தை நற்குணம்பெற நானேசேர்ந் தென்னிருகண்மலரிற் பூண்டுக்கொண்டாற் றெளிவுதரு மொளியுண்டாம் அப்பாதத்திலருந்திய வாசமுள்ளதேவவுணவுமாறுத வின்பமாமென்க. (௬அ.)

ஊசல்.

இன்பமெனவுலககசுகந் தன்னைத்தேடி யெந்நாளுமலையுமனத்திகழ்வுண்டாக, வன்புநிலைக்கம்பமா யசையாநாட்டி யரியமறைவிட்டமா யணைத்துக்கட்டிப், பின்புநல்முறைமையெல்லாங் கயிறுய்ச்சேர்த்துப் பேரறமேபலகையாய்ப்பெயராபபூட்டித், துன்பறவேநசரைமன்னுவாடிரூசல் தொல்லுலகோர்கதியுறவேயாடிரூசல். *

(இ - ள்.) இன்பமென் றுலகத்தைத்தேடி யெந்நாளுமலையப்பட்ட மனமகிழ்ச்சியாகும்படியாய் உன்றயை நிலையானகம்பமாய் அசையாமனுட்டியரிதான மெய்வேதத்தை மேல்விட்டமாய்ச்சேர்த்துக் கட்டியபின் னன்முறைமையெல்லாங் கயிறுட்சேர்த்துப் பிணித்துப்பேரறமாகிய வில்லறந்துறவறமென்னு மீரறங்களையுமொன்றுபட வொருபலகையா யசையாமற்சேர்த்துக்கட்டித்துன்பமறநசரைநாயகனே யாடிரூசல் பூவுலகத்தோர் பரமகதிசேர வாடிரூசலென்க. (௬௯.)

சந்தவிருத்தம்

ஊசலுறுத்தியமோ காசையொழித்திடுவா ரொண்டரளத்திணையா நன்றணியேயணிவார், பாசமுறுத்தியமா காசையகற்றிடுவார் பண்புதொகுத்தவரோ நண்புளமுற்றுறுவா, ராசமுறுக்கியநீ ராவிகுடைந்திடுவா ரம்மனைபந்துகழங் காடியவங்கணைபார், காசமுறுந்திகழார் தேசுறுநன்னசரா காவலனன்பினியை வாவன்மிகுத்தவரோ. *

(இ - ள்.) மனதைத்தூண்டியசைக்கு மோகாசையையொழித்திடுவார் விளங்கிய முத்துக்கிணையான நன்மையினுபரணத்தையணிந்துகொள்வார் பிசாசுவருத்தியபெரும்பாவங்களைத்தள்ளிப்போடுவார் நற்குணச்சேர்க்கையான சினேகத்துடன் சினேகித்த சினேகத்தை மனதில்முற்றுங்கொண்டிருப்பார் நகைத்துக்களிப்பாய் நீர்க்குளத்திற்குளித்து விளையாடுவார் பூப்பந்தாலம்மானையாடிக்கொண்டிருக்கு மாதர்கள்பொன்னால்விளங்குமழகிய நன்னசரைமாபுரி யரசன்றயையி னின்பத்தி னுவலில் மிகுத்திருப்பாரிவரென்க. (௭0)

விருத்தம்.

மிகுத்ததயைநறை யுகைத்த லிடவுளமிழற்ற நசராயிறைதனு
மிகுத்தலுறுமவ ரகத்திலுறுமென வகுத்த மொழிதவறு
மலே - யுகுத்திவரமழை யுவப்பவெய்தினன் றொகுத்த நல
முறைமீந்தனன் - பகுத்தநலமுறி முதைத்த வுயிர்மகள்
பயிற்ற விவருறவாடினூர். - - - - *

(இ - ள்.) மிகுத்ததயையின் றேனைச் செலுத்தவுள்ளத்தி லுணாக்குநசரா நாயகன்றன்னையழைத்தவரிடத்தில்வருவேனென்று சொன்னசொற்றவறுமல்வரமழைபொழிந்துமகிழ்வாய்வந்துசேர்ந்தான் அவ்வாத்து மத்துக்குச்சேர்க்கையானநன்முறைமையெல்லாந்தந்தான் அந்தநன்மையைக்கொண்டுமகிழ்நத வாத்துமமென்னும்பெண்ணவளோடுபேசவிவரிருவருமுறவாடினரென்க. (எக.)

விருத்தம்.

உறவாடியெய்தியென்னையாளுகின்றவொளியேயவிளங்குநசரா
யறவாழியேநல்லருளாழியே யென்னகமீதுறைந்தவடிவே
நறவாகுமின்பமுகியாதருந்தி நளிராவிகொண்டனிமேற்
றிறவாவலானதொழியாதென்றனுந்திருவுஞ்சுகந்தமருவே*

(இ - ள்.) வந்துறவாடி யென்னையாளுகின்ற வொளிவே, விளங்குநசராயிலிருக்குந்தருமக்கடலே, நற்றயைக்கடலே, யென னிடத்திலுறைந்தவடிவே, அந்தவின்பத்தேனை முகியாமலருந்தி குளிர்ச்சிகொண்ட தென்றைத்தும மினிமேம லிந்தவுச்சாகமான வாவலுஞ்செல்வமுந் திவ்வியசுகந்தவாசமு மெந்நாளு மென்னை விட்டுநீங்காதென்க. (எஉ.)

தென்றல் - விருத்தம்.

மருவலர்முன்னுகைத்தியதீ வினைத்தீயில் மாழ்கினன்மன தின்மிக்கப், பொருவரியமம்மொரிபுணர்ந்திருந்தேன்றென் றலேபூரிப்பாகத், திருவருள்கொண்டென்னையாளு நசராமன் னனென்னிடத்திற்சேர்ந்ததாலே, மருவலரின்மணங்கொண் டுவந்தாய் பேரின்பமுள்ளவசந்தமாமே - - - - *

(இ - ள்.) பகைவர்முன்னெனக்குச் செலுத்தியதிவினைத்தீயில்மயங்கி நான்மனதில்மிகவுமொப்பரிய துன்பநெருப்புப்பற்றியிருந்தேன். தென்றற்காற்றிப்போதுபூரிப்பாகத்திருவருள்கொண் டென்னையாளுநசரா நாயகன் றன்பத்தியையவித்தென்னிடத்

தில் வந்துசேர்ந்ததாலேநான்களிப்பாயிருக்கு மிவ்வேளையில்வாச மலர் மணத்தைக்கொண்டு வீசிவந்தாய் நீபேரின்பமுள்ளதென் றலாமென்க. (எந.)

விருத்தம்.

வசுக்கானற் சுரந்தனிலே வனசம்பூத்தது போலும் - *
நிசிக்கு குவற்றிடப் பௌவநிலவு தோன்றிய போலும் - *
வசுக்காந்தி நசரைமன்ன மாசகற்றி யெனதாவிப் - *
பசிக்கான வமுதமுமாய்ப் பரிவுடன்வந்த மைந்தனையே *

(இ - ள்.) நெருப்புங் கானலுங் குடியாயிருக்கும் பாலை நிலத்திற் றாமரைபூத்தது போலவும் அமாவாசையிராவிருளிற் பவுரணைநிலவு தோன்றினாற் போலவும் பொன்னொளி விளங்கிய நசரைநாயகனே யென்பாவ அந்தகாரத்தைப் போக்கி யென்னாத்துமப் பசிக்கான தேவ போசனமா யன்புடன்வந் தமைந்தாயே யென்க. (எச.)

கலித்துறை.

அமையமறிந்து மிகவாயிரங்கு மருளுருவா - - *
னிமையவர் போற்று நசரைத்தலைவனு மென்றனக்கே *
யிமையமுறுஞ்சற்பிரசாதமென்னுமியைக்கருவை - *
யமையவமைத்தனனென்னவிபேரின்பமாகிடவே *

(இ - ள்.) காலமறிந்து மிகவாயிரங்கு மருளுருவானவன் வானவர்போற்று நசரைநாயகனென்றனக்கே யொளியுள்ள தேவ சற்பிரசாதமென்னுங் கருப்பமுண்டாகச்செய்தா னென்னாத்துமம் பேரின்பமாகவேயென்க. (எரு.)

விருத்தம்,

ஆகமற்றவனகாரியனந்த ஞரணப்பொருளென்னவியளிக்க*
ஆகமுற்றபுவிமீதினிலேதா னுருவெடுத்த நசரைத்திருவெந் தை,யேகமுற்றுமிகநானவனின்பாயேகரித்துசுகமாகவிருக்கத், தாகமுற்றபடியாகவெனக்குத் தந்தநல்லதிருவானதைவாரி

(இ - ள்.) சரீரமில்லாதவன் மெய்க்கடவுளானவ னளவில்லாதவன் வேதப்பொருளானவ னென்னாத்துமத்தையிரட்சிக்கச் சித்தமாயுலகத்திற் றன்மனுவுருவெடுத்த நசரைச்செல்வவரசனைத் தனிமையில்நானுமவனுமேகரித்தொன்றாயிருக்கத் தக்கதாய்நானாசைப் பட்டபடி யெனக்குநல்லசெல்வத்தை வாரித்தந்தானென்க. (எசு.)

விருத்தம்.

வாரீர்புவனத் துள்ளோரே வடிவமிலங்குநசராமன்னைப் - *
பாரீருமதுகரங்கூப்பிப் பணிவீர் பணிந்துபனி மலர்த்தாட்
சேரீருமதுகுறைகளெல்லாஞ் செப்பியினிசெய்யோமென்று
சாரீரவன்றன்னருண்மலைமேற் றளர்வில்லாமல்வாழ்வீரே. *

(இ - ள்) வாருங்கோள் பூவுலகத்திலுள்ளோரே வடிவமில ங்கிய நசராக்கரசனைப்பாருங்கோ ளும்மது திருக்கைகளைக்கூப்பிப் பணியுங்கோள் பணிந்துகுளிர்ந்த மலர்ப்பாதத்திற் சேருங்கோ ளுமது குற்றங்களைச்சொல்லி யினிச்செய்வதில்லையென்று சாருங் கோ ளவனருண்மலைமேற் றளர்வில்லாமல்வாழ்விரென்க. (எஎ.)

வெண்கூவெண்பா.

வாழ்வானதென்னசரா மன்னனைப்போற்றினர்க - - *
டாழ்வில்லாதோங்குவார் தாரணியிற் - கேழ்விதப்பும் - *
விண்ணுலகவின்பநல வேட்டலுண்டுவில்லொளியைக் - *
கண்ணிரண்டாற்காண்பார்களித்து. - - - *

(இ - ள்.) வாழ்வான வழகிய நசரா நாயகனைப் போற்றின வர் தாழ்வில்லாமலுயர்ச்சியாவா ரிவ்வுலகத்திலிதுவுமன்றி யொளி மிகுத்த வானுலகின்பநன்மையை விருப்பமாயருந்திய கதிர்பிர பையை யிரண்டுகண்களாற் காண்பார்களித்தென்க. (எஅ.)

விருத்தம்.

களித்ததினத்தில் வருந்தென்றற் காலேமணந்தோய்மலரின மே, விளித்தமழவுக் குயிலினமே விரிபைஞ்சிறகின்கிளியின மே, துளித்ததேமாங் கனியினமே தூயநசரா மன்னனென் னை, யளித்தமுறைக் காய்க்கால்மணமு மருப்பாச்சுவையாற் புகழ்வீரே. - - - - - *

(இ - ள்.) களிப்புள்ள விளவேனிற்காலநாளில் வருந்தென் றற்காற்றே யிப்பருவத்திற்மலரு மணமிகுமலர்களே யாண்டவனை யழைத்தவிளங்குயில்களே விரிந்தபசுஞ்சிறகுள்ள கிளிகளே தேன் றுளிக்குமாங்கனிகளே தூயநசரா நாயகனென்னை யிரட்சித்தமுறை மைக்காகத் தென்றல்தன்காற்றாலும் புட்பங்கள் தம்மணத்தாலுங் குயில்களுங்கிளிகளுந் தங்குரற்றொனிப்பாலு மாங்கனிகடஞ் சுவையாலும்புகழுங்களென்க. (எகூ.)

சந்தவிருத்தம்.

புகலருமறத்திஞற் பூவுலகதி புகையெரிகனத்த மாரிபொழி
யவே, சகலருமழித்துநீருக்கியபினர் தரணியிலெழுப்பியே
மாந்தரையினிய, சகலரைச்சபித்துதீயேவியு நலரனேவரைவி
ளித்துவானீநசரையிற்,றகலுறநிலேத்தகோவேநலருடன்றகை
பெறவெனக்குமாசிதருவையே. - - *

(இ-ள்.) சொல்லரியபாவத்திஞற் பூவுலகத்தி லதிகபுகை மண்டி யக்கினிமாரி பொழியவே மனுடருஞ் சகலசராசரங்களு மழித்து நீருக்கினபின்ன ரினிமேல்மனிதரை யெழுப்பிப் பாவி களைச்ச பித்துநரகத்திற்றள்ளி நல்லோரனேவரையுமழைத்துப்பர மகதிகொடுக்கு நசரையிலுரிமையாய் நிலேத்திருந்தவரசனே அந் த நல்லவருடன்கூடிப் பெருமைபெற வெனக்கு மாசீர்வாதந் தருவாயென்க. (அய.)

தாழிசைக்கலிப்பா.

தருமமுள்ளமந்திரமாந் தகமையுள்ளமந்திரமாந் - *
திருவரங்களுறைகயமாஞ் சேணங்களுறைகயமா - - *
மருபயஞ்சொற்றலேவனுமாம் வளர்நசரைத்தலேவனுமா *
மருகநயந்திருப்பீரோ யகமுண்ணயந்திருப்பீரோ. - - *

(இ-ள்.) தருமமுள்ளமந்திரமாம், அழகுள்ளதேவகோயிலாம், திருவரங்களுறைந்தகுளமாம், மேலானவின்பமுறைந்த பெருமை யாம், வாசமுள்ளவமிர்தத்துக் கிணையான சொல்லுடையகுருவான வனும், வளமைநசரைத் தலேவனுமாமவனேக் கிட்டிச்சேரவிரும்பி யிருப்போரோயுமதுள்ளத்தைப்பாவத்தைவிட்டு நன்மையிற்றிருப் புவீரென்க. (அக.)

விருத்தம்.

திருநயன்றருபாரி செயிரினிசியறுசூரி சிதைவகற்றியமூரிகன
மான, வருணயந்தருமாரி யகமுழங்கிடுதாரி யமிர்தமின்புள
வாரியுணர்ஞான, தெருணயந்தருமூரி சேணிலத்துயர்வேரி
திடநிறைந்திடுமேரி புவியோர்க்குப், பொருணயந்திடுபூரி
புற்கலன்பகிதோரி புகழுநசரையிலூரிற் றிகழ்ந்கோனே. *

(இ-ள்.) திருத்தருமத்தேனும் பாவவிருளறுக்குஞ் சூரிய னுங்கேடகற்றிய வல்லமையுமதிகமாக வருணன்மையைத் தரு மேகமுமனத்துக்கொழுங்கானவழியும் அளவில்லாதவின்பக்கடலு மறிவுக்கும் ஞானத்துக்குந் தெளிவைத்தரும்பெருமையு மோட்ச

சுகந்தமு மெய்ம்மைநிறைந்த வேரியும் பூவுலகத்தாருக்குத் திரவி யங்கொடுக்குஞ் செல்வமுமாத்துமப்பசிக்கமுதமும் புகழப்பட்ட நசராயூரில் விளங்கியவரசனேயென்க. (அஉ.)

வ லை ச் சி - த் தா ழி சை.

கோளையொத்த வெழினசராமா புரியிற் குலவுமாடமணி வீதியிற் - கூடைமீது கயல்மூடிவைத்துவிலைகூறுகின்ற வலைச்சியரோகேள் - வாளையுஞ்சுரும்பு நிகருவெங்கணை மறு த்துப்பாராயு மொதுக்குவாய்-மடவைகண்டகத்தின்காரை யொத்தனவவ் வாலுந்தீங்குளுவை யென்றெளி-தேளியொ த்த கருங் கூ ளியானதுமுள திருக்கைவெஞ்சினமும் போக் கிடாய்த் - தேடிடாதேமுதற் கெண்டை சேலைதனைத் தின மூமின்பமோ ராவிரு - வாளியாளுறப்பன் ளுவையும் பொ றியை யடக்கினன்று வக்கிலுன்னையே - யளித்துநல்ல திரு க்கையினுலுயர்த்தி யதிகவான்பொரு ளளிப்பனே. *

(இ - ள்.) நவக்கிரகத்தி லொன்றுபோல் விளங்கு மழகிய நசராமாபுரியினிறைந்த மணிமாடமுள்ளவீதியிற்கூடையிற் கெ ண்டைமீனைமூடிவைத்து விலைகூறிவருகின்ற வலைச்சியரோகேள் கூர்ந்தவாளையும் வண்டையு நிகரப்பட்ட கொடியகண்ணைக் கொ ண்டுபார்க்கும்பார்வையைமறுத்து உலகத்தையு முன்போற் பற் றுதலில்லாம லொதுக்குவாய் முள்ளுள்ள கடவுமரத்தி னிருளை யொத்திடு மற்றவசுத்தமான குற்றத்தைக் கண்டபோ துன்னைக் கொல்லும் புலியென்றெளி, தேளிமீனுக் கிணையான கருங்கூளிப் பேயுமுன்னுள்ளத் துள்ளதிருக்கையுங் கோபமும் போக்குவா ய், அருகிற் கெண்டைபோட்ட நல்லசேலையைத்தேடி யுடுக்காதே, தினமுமின்பத்தைத்தெரிந்துட்கொள்ளாதிருப்பாய், ஆளுமிக்கட வுளுன்னை யாளும்படியா யுன்பல்லைக்காட்டி நகையாமலுமினிய மொழிபேசாமலு மைம்பொறியையடக்கி நன்மையில்மகிழ்ச் சியாகி லுன்னையே யிரட்சித்து நல்லதிருக்கையினு லெடுத் து யர்த்தி யதிகமாய் வானுலகின்பொருளைத் தருவானென்க. (அ௩.)

விருத்தம்.

அளிகளிமிர்ந்தலர்மீதி லளிகளருந்திடவீழ்காற் - - *
றுளியனதேறல்சிதர்த்தி சொற்பயிர்பாய்பணைசூழு - *
நளியுளநசராயினுத னறைமலரடி தொழுவீரேல். - - *
வெளியுலகணியில்வியந்து விண்ணவரொத்திடுவீரே. - *

(இ-ள்.) வண்டுகளொலித்து மலர்மீதிற் றேன்களையருந்த மொய்த்து மழைத்துளிபோற் றேன்றிரட்சிந்தி நெற்பயிரிற் பாயும்வயல்சூழ்ந் தகன்ற நசரைமாபுரிநாதன் வாசமலர்ப்பாதத் தைத் தொழுவீராகில்வானுலக அலங்காரத்தைக்கண் டதிசயித்து வானவரோ டொத்திருப்பீரென்க. (அச.)

விருத்தம்.

ஒத்தந்தந்த வுண்மையைநம்பாயோ நெஞ்சே - - *
யத்தங்கண் டாறன்முகமுள்ளதறிவான்போல் - - *
நித்தந்தீக்கண் டஞ்சுதலாய் நன்னிலை கொள்வாய் - *
வித்தந்தருவா னசரையிநாதன் மிதமில்லா. - - *

(இ-ள்.) மெய்வேதந்தந்த வுண்மையைநம்பாயோ வென் னெஞ்சமே, கண்ணாடியைப்பார்த் தவன்றன்முகத்தி லுள்ளதைக் கண்டறிவான்போல் நீ நித்தமுநரகத் தீயைக்கண்டு பயப்பட்டு நன்மையினிலைகொள்வா யுனக்கு வான்றிரவியத்தைத்தருவான் நச ரையினாத னளவில்லாமலென்க. (அரு.)

மதங்கி - விருத்தம்.

மிதங்களில்லாதநலங்கள் விதங்கணிகங்கனமீயுந் - - *
ததங்கணியாநசரைத்தா ணிதங்கள்மதங்கியர்பாட- - - *
மதங்கிமலர்கரமங்கண் வணங்கிலாடிடலோடு - - *
பதங்கிளரின்பநலத்தைப் பணிந்துவிழுந்தணிவீரோ. - *

(இ-ள்.) அளவில்லாத பலவிதநன்மைகளில் நூறுகோ டிக்கதிகங்கொடுக்குமளவை யிவ்வளவென்றுமதிக்கரிய நசரைத் தாளுகியகடவுளின தேவவுரிமைகளைக் கன்னிமாதர்கள் பாடவு மதங்கியென்னுங் கன்னிப்பெண் மலர்க்கையால் வணங்குகையி லசைந்தாடுங் கையாட்டத்தோடுபூந்தாதுவீசு மலர்ப்பாத்தைப்ப ணிந்து விழுந்தணிந்துக் கொள்வாரென்க. (அசா.)

தாழிசை.

அணிவிளங்கு நசரைநாத னருகிலணிய தாகநின் றருமதங்க ரிசைகள்பாட வவர்களுவுமாடவு, மணிவிளங்கு மெழின்மத ங்கி வனசபொற் கரங்களும் வணங்கிலாடநெஞ்சமஞ்சமன் பிலூஞ்சலாடவுந், துணிவிளங்கு மிதயமாகித் துன்பநீங்க லாயினூர் தொற்பழிக்கு ளுற்றுநித்தந் துயருறைந்தடைமந் தமோ, பணிவிளங்கு பரிவுகொண்டு பார்த்திறைஞ்சி லுள்ளி னோய் பற்றுமற்று முத்திபெற்று முற்றும்வாழலாகுமே.

(இ - ள்.) அழகிலங்கிய நசரை நாதன் அருகிடத்தி லொழுங்காய் நின்றரிதாய்ப்பாடுவோ ரிசைப்பாட்டுப்பாடும்போ தவர்களுவாடவு மாணிக்கவொளி யழகுள்ள மதங்கியென்னுங் கன்னிப்பெண் பொற்றுமனைக்கைகளு நாதனை வணங்குகையி லாடவுமவனெஞ்சமென்னு மஞ்சத்திலன்பிருந் தூஞ்சலாடவு மொளிவிளங்கு மிருதயமாகித் துன்பநீங்கினவராஞர் பழம்பழியாகிய வாதித்தகப்பன்செய் பழிக்குட்பட்டு நித்தந் துன்பமுறைந்த மானுடரோ யாண்டவனேவ லூழியஞ்செய்ய விளக்கமாகு மன்னைக்கொண்டு பணிந்துதொழுவீராகி லுமதுள்ளத்திலுள்ள நோயுங்கெட்டவாசையுமற்றுப் பரமகதியை முற்றும்பெற்று வாழலாகுமென்க. (அஎ.)

விருத்தம்.

ஆகுலமுற் றெந்நாளு மகத்திஞெந் தாற்றுவீர்காள் *
சோகுலவிற் றளர்ந்து துகளின்முற் றுழலுவீர்காள் *
வாகுலா நசரைமன்னன் மறைநெறி தொடர்விராகிற் *
கோகுல முத்தரோடு குணிக்கருநலம்பெற்றுய்வீர். *

(இ - ள்.) வியாகுலங்கொண் டெந்நாளுமனதிஞெந் தழுவோர்களே, பிசாசு வாதைகளிற்றளர்ந்து பாவத்தில்முழுது முழல்வோர்களே, யழகுலாவிய நசரைநாயகன் வேதநெறிவழியைத் தேடிப்பின்செல்வீராகில் மோக்ஷகுலத்தாராகிய முத்தரோடுமதிக்கரியநன்மைபெற் றுயிர்வாழ்வீரென்க. (அஅ.)

விருத்தம்.

பெற்றியிற்பற்றுற மற்றவசுத்தரோ - - - *
குற்றமற்றுற்றநற் பத்தியுட்பத்த வே - - *
நிற்றலைப்பற்றிட முற்றுமின்னசரையின் - - - *
கொற்றவனற்புகழ் சொற்றுவிர்நித்த மே. - - *

(இ. - ள்.) நற்குணம்வற்த்திக்க வாசைப்பட்டு வலியதவஞ்செய்யுஞ் சுத்தவான்களே குற்றமில்லாததேவபத்தியுட்பத்திபெரியவே, அந்நிலையைப்பற்றிப்பிடிக்க முற்றுமொளி நசரையினரசனை நித்தம் பலபுகழ்ச்சி சொல்லுவீரென்க. (அகூ.)

விருத்தம்.

நித்தியனே நசரைநகராளுங்கோவேநின்றலே நானுலகிலுருவதானேன் - நத்தியமாயென்றல் நீயுருவதாஞய் தாழ்வானவென்னுடனீயெடுத்துக்கொண்டு - சத்தியுளதாக்கிஞய் புன்

மைபோக்கித் தகைமேன்மை பொருந்திய நல்லுருவமாக்கி - முத்தியினில் வீற்றிருக்கவும்பரொல்லா முயற்சியுடன் போற் றவைத்தாய் முடிவில்லாதே. *

(இ-ள்.) எப்போதுமுள்ளவனே, நசரைநகராளுமரசனே, உன்றாலேநானுலகத்தில் மனுவுருவானேன், மெய்யாகவென்றாலே நீமனுவுருவானாய், நீசமான வென்னுடலை நீயெடுத்துக்கொண்டுவல் லமையுள்ளதாக்கினாய் அதினீசத்தனத்தைப் போக்கியழகும் பெரு மையும் பொருந்திய நல்லுருவமாக்கிப் பரமகதியில வீற்றிருக்க வானவரொல்லாரு முயற்சியாய்ப்போற்றிவணங்கவைத்தாய் முகிவில் லாத காலமென்க. (௬௰.)

வண்ணவிருத்தம்.

முடிவுமின்றியடி நடுவுமின்றியுரு வுடலுமின்றி நிலைமுதல்வ னீ, வடிவுகொண்டுநல பரிவுசொண்டு தவ படிவுநன்றுபய னுறவுயிர், மடிவுகொண்டுமறு படியெழுந்துலகில் மனிதர் நன்குறவுவளரவும், வடிவுகொண்ட திருநசரையம்பதியில் மகிழ்வுகொண்டமறையரசனே. *

(இ - ள்.) முடிவுமின்றி துவக்கமுநடுவுமின்றி யுருவுடலின்றி நிலையானமுதல்வனீ உருவங்கொண்டு நல்லன்புகொண்டு தவநோ ன்புக்கு நன்மைப்பயன் சித்திக்க நின்னுயிரை மடியக்கொடுத்து மறுபடியெழுந்துலகத்தில் மனுடருடனன்மையுறவுண்டாக்கி வள ர்த்தாய்வடிவங்கொண்ட திருநசரைப்பதியில் மகிழ்ச்சியாய்க் குடி கொண்டவேதத்தரசனே யென்க. (௬௧.)

விருத்தம்.

மறையுரைத்திடு மொழிகளற்பமும் வழுவிலாத நற்றெரிசி கள், முறையுரைத்தனன் மொழிவழாமலே முழுதியற்றிய முதலவ, னறையுகுத்ததென் னசரையூரிலே நலமிகுத்துறை கடவுளா, மறைபுகுத்தநீ ரெனவரங்களை யுலகிற் சிந்தின னுய்யவே. *

(இ. - ள்.) வேதமுரைக்கு மொழிகளற்பமாகிலும் வழுவா மனடக்கு நற்றீர்க்கத் தெரிசிகள் முறைமையாயுரைத்த நற்சொல் வழுவாமல் முழுதுநிறைவேற்றிய முதல்வனனவன், வாசம்பொழி யும் பூஞ்சோலை சூழ்ந்த வழகிய நசரையூரிலே யதிகவின்பமாய்க் குடியிருக்குங் கடவுளாமேகஞ்சிந்தியநீர்போலவரங்களை யுலகத்திற் சிந்தினான் மனிதருயிர் வாழவென்க. - - - (௬௨.)

விருத்தம்.

உய்யவிவ்வுலகமைந்த ரோங்கியதயையின்மாட்சி - - *
மெய்யரும்பயனையாரும் விளம்பிடக்கூடாதந்தத் - *
துய்யரும்பயனைக்கொண்டு தூக்கிவிண் ணுலகிற்சேர்த்தா *
ணையருநசரையூரினளியருட் கொடையுள்ளானே. - - *

(இ - ள்.) இவ்வுலகமானுடருயிர் வாழவுயர்ந்த தயையின் மாட்சியினுண்மையுள்ள வரும்பயனை யாவருங்கூடிச் சொல்லக் கூடாது அந்தத் தூயருந்தயைப்பயனைக்கொண்டுமனிதரைத்தூக்கி வானுலகத்திற்சேர்த்தான் அழகியநசரையூரிலிருந்தன்புந்தயையுங் கொடைதானங் கொடுக்கப்பட்ட கடவுளென்க. (௯௩.)

தாழிசை.

உள்ளமீதுநன்குவைத்த வுண்மைமெய்யரல்லது - - *
கள்ளஞானவேடமாகக் காட்டுகின்றநீசரே - - - - *
பள்ளநீரிருக்குமேடு பற்றிகானல்சுற்றுமே - - - *
வள்ளல் நசரையருடவர்க்கு வன்னிமற்றவர்க்குமே. - - *

(இ - ள்.) உள்ளத்தி னன்மை வைத்துக் கொண்டிருக்கு மெய்யான முனிவரல்லாமற் கள்ளஞானவேட ங்காட்டுகின்ற நீசரே கேளுங்கோள் பள்ளத்திற்றண்ணீரிருக்கு மேட்டிற் கானற் பற்றிச்சுற்றுமே யங்ஙன நசரைவள்ளலின் குளுந்தயைமெய்யான தவசிகளிடத்திலிருக்கும் மற்றவர்க்கவன் றருமாக்கினையான நரகத் தீயுண்டாமென்க. (௯௪.)

விருத்தம்.

மற்றுமொருபொருணிகரா நசரைமேவு மன்னனருட்டிருவுளத்தின்மாட்சிகேண்மின், பற்றுறுமிப்பாரோரைமீட்க்த் தானும் பாடுபடவிசைந்திடுங் காற்பகைஞர்பற்றி, முற்றுமவராற்கூடும்வாதைசெய்து முனிந்துகொல்லுங்கொடியவர் மேலிரக்கமாகிப், பற்றுறுஞ்சொல்லாக நற்றுதைநோக்கிப் பாவிகள்செய்பிழைபொறுமென்றிரந்தாரன்றே. *

(இ - ள்.) மற்றொருபொருளு முவமிக்கரிய நசரையின் மேவுமரசன் றயையுள்ள திருவுளத்தின் பெருமையைக் கேளுங்கள் அஃதெங்ஙனமெனில் உகத்தைவிரும்பிய மனுடரைமீட்கத் தான்பாடுபட விசைந்தபோது பகைவர் பிடித்துத் தங்களாற் கூடுமட்டுந் துன்பஞ்செய்து சினந்துகொல்லுங்கொடியவர்மே லிரக்

கமாகி யன்பானசொல்லாய் நற்பிதாவைநோக்கி யிந்தப்பாவிகள் செய்யும் பிழையைப் பொறுத்துக்கொள்ளுமென்று வருந்திமன் ருடினுரென்க. (சுரு.)

விருத்தம்.

இரங்காதநெஞ்ச னரங்கானவஞ்ச னிழுக்கான வெஞ்சன் மு
ழூப்பாதகமுமா, யுரங்காழகத்த னுறுங்காய்மகாரி யுணரற்கே
டுமிக வவப்பேதகமுமுட், டிரங்கொண்டபாவிக்குணம் விண்
டகத்திற்செயிர்க்காக நொந்தேன்திருச்சேருநசரைப், புரங்
கொண்ட வள்ளல்வரங்கொண்ட நின்ருட்புலந்தன்னில்வைத்
தின்னலந்தாருமிகவே. - - - *

(இ - ள்.) பிறர்க்கிரங்காதநெஞ்சன், வஞ்சகத்திலழுந்தியவஞ்சகன் ஈனமுள்ளகோபி, முழுதும்பாதகத்திற் பலத்தவைராக்கியமனமுள்ளவன் அதிககாய்மகாரி, நினைப்பதெல்லாங்கேடு நினைவாமவப்பேதகத்தி னிலைகொண்டபாவியான நானென்றுற்குணங்களைவிட்டிந்தப்பாவங்களுக்காகமன நொந்தேன் திருச்சேருநசரைமாபுரத்திற் குடிகொண்டிருக்கும் வள்ளலே வரங்குடிகொண்டிருக்குமுனதொளியுள்ள பாதத்தி லென்னைச் சேர்த்துவைத்தின்பநன்மையைத்தாருமென்க. (சுசா.)

விருத்தம்.

மிகவுநயந்திகழ்மகிமைவளந்திகழ் வெளியொளியுந்திகழத்
தகவுநயந்திகழ்மறைவடிவந்திகழ் தருமமயந்திகழத் *
தகவுநயந்திகழ் நசரையினேசுவை சகலநயந்திகழுந் *
தகவுநயந்தெனை யடிமையுறச்செயுந் தகமைவரம்பிலவே. *

(இ - ள்.) அதிகநன்மையிலங்கவு மகிமையும் பெருமையுமிலங்கவு மோட்சப்பிரகாசமுன்னிலங்கவு முரிமையாகிய நன்மையிலங்கவும் வேதவடிவமிலங்கவுந் தருமமயமாயிலங்கவு நற்குணமிலங்கிய நசரையேசுநாயகனே சகலநன்மையுமிலங்கு முனதுதயவைத் தந்தென்னை யடிமையாகச் செய்யும்பெருமைக் களவில்லையென்க. (சுஎ.)

விருத்தம்.

வரம்பிலா நடுவோய்முன்னுள் வாழ்ந்திடுமெசித்துநாட்டைப்
பிரம்பினுல்வருத்தஞ்செய்து பெருகியவிசரேறம்மை *
வரம்பலித்திடுகமீட்டு வரம்பொழிநாட்டைத்தந்தக் *
கரம்பிணர்நசரைமன்ன கயவனைப்பதத்திற்சேராய். *

(இ - ள்.) அளவில்லாத நீதியுள்ளவனே முன்னாள்வாழு மெசித்துநாட்டிற் சேர்ந்த விசறேற்சனங்களை யிரட்சிக்கும்படியாய் மோயீசனைக் கொண்டு பிரம்பினா லந்நாட்டி லிருப்பவர்க்கு வருத்தஞ்செய்து நிறைந்திருந்த விசறேற்சாதியாரை வரப்பயனுண்டாகமீட்டு மதுப்பொழியுநாட்டை யவர்க்குத்தந்த கிரணவடிவாகிய நசரைக்கிறையவனே நீசனாகிய வென்னை யுன்திருப்பாதத்திற் சேர்த்தருள்வாயென்க. (கூஅ.)

வெண்பா.

சேர்ந்துனதுபாத தெரிசனையைக்கண்டுகளித் - - *
தார்ந்திருக்குங்காலமறியேனே கூர்ந்தொளியுண் - - *
மண்ணியமாநன்னசரை மன்னவுனைப்பாடினே - - *
னண்ணியவானின்பருந்த நான். - - - - *

(இ - ள்.) உன்பாதத்திற்சேர்ந்து பாததெரிசனையைக்கண்டு களிகூர்ந்திருக்குங் கால மெக்காலமென்று நானறியேனே, யதிக வொளியுள்ள வலங்காரமாகு நசரைமன்னவனே யுன்னைப்பாடினேன், நான்சேரவிரும்பியவானுலகிலுள்ளபேரின்பத்தை யருந்தவென்க. (கூகூ.)

கையுறைகொடுத்தல். கலித்துறை.

நானுவப்பாகநசரைமன்றந்த விந்நன்மணியே *
வானுவப்பாமணியோ வுயிர்வாழும்வரமணியோ *
வேனுவப்பாமணியன் பெனுமாமணிவிண்ணமரர் *
கோனுவப்பாமணிமும்மணியொன்றாங்குருமணியே. *

(இ - ள்.) நான்மகிழ்ச்சியாக நசரைமன்னவன்றந்த விந்த நன்மணியே வானுலகி னுயர்ந்தமாமணியோ, வாத்துமத்தை வாழ்விக்கும் வரமணியோ, வதிகமகிழ்ச்சியாய்த் தயையென்னுமாமணியாம், வானவர்மகிழுமரசானமணியாம், பிதாச்சுதனிஸ்பிரீத்துசாந்தென்னு மூன்றுமணியு மொன்றாகிய வொளிமாமணியா மென்க.

நசரைக்கலம்பகம் முற்றிற்று. (ம.)





# அன்னையின் பிரலாப வண்ணம்.



## முதல் வண்ணம்.

(இராகம் புன்னாகவராளி, தாளம் - ஆதி)

தானதனத்தனனா தன தானதத்தனனா தன தானதத்தன தான
தத்தன தானதத்தன தானதத்தன, தானதனந்தனனா தன தான
தந்தனனா தன தானதந்தன தானதந்தன தானதந்தன தானதா
னன——தந்தனத்தந் தனதனத்தந் தனதனா.

ஆதிதிரித்துவமா மறை யாகமப்பொருளா மச ரீரிதற்சுய
மான நித்திய னாதிலக்கண ஞானதற்பர, னாதியுமந்தமிலா தவி யாப
கன்புவிவா னொடி யாவையும்புகல் பூதமைம்புலமேதுமொன்றுமி
லாதபோதினி, லோர்நொடியிற்றனிலே யுள வாவமைத்திடுகா ரண
னேதிலக்கற வானகத்தமை யூனமற்றிட ரூபரிற்சில, ரோதுமகந்
தையினா னர கூடுறைந்திடவே சில ரோகைநன்கதி வாழ்வுகந்தத
னோடிலங்கவு மீளவேபர, னார்புவியிற்றனிலே திகழ் பூதியத்துட
னே யதமேவையைத்திற னல்வரத்துட னாகமுற்றிட வேசிறப்
புட, னாகவனந்தனிலே வில கோர்தருங்கனியானதை யாதமங்கவை
யோடருந்துத லாலுறும்பழி நாசமாகவே-இம்பருக்கம் பரமனு
ச்சென் றிலகவே. - - - - (ஹு·)

ஆரணசத்தியமா மறை யாகமப்படியே யரு வானதற்பர னீதி
சிற்பர னாகவித்தனை மாதொருத்தியை, யார்கலியின்றினைகூ மூல
காளுமன்றவிகோ னரி தானவங்கிஷி மீதுறைந்தரு ளானசம்ப்ரமி
யானதோர்கனி, மாசறுகற்புடையாள் மரி மாதுபுத்திரனார் கவி
மாநிலத்தொரு காரணக்குரு வாகவற்புதமேசெய்திப்புவி, மானவ
ருங்கதிவாழ் மறை யோதிமூன்புரிதீ வினை மாளவெந்தைபி தாவு
கந்திட வானகந்தரு மீதிலேதமை, யாதனையிற்றனிலே பலி யாவ
மைத்திடவே மனு வாயெடுத்துடல் பூதர்கைத்திற மாவளித்தவர்
பாடுபட்டுமெய், யாகவுயர்ந்திடுநீ டுக பாலகுன்றதிலே யதி பார
மென்குரு சேசுமந்தவ ராய்நடந்தவி சேஷமாகிய - தம்பமற்ற
ந் தனைமரிக்கன் றறையவே. - - (வ.)

சோதிதிருச்சுதன ரவர் சீஷரிற்கருணு முனி சோபமுற்றதி தீவிரத்தொடு தூயவர்ச்சிய தூய்பதத்திடை, தோயவிழுந்தழுதே பிர லாபமிஞ்சிடவே துய ரோடெழுந்தவர் வாய்திறந்துசு தாபரன் றன தாயரோ துயர், சாகரமுற்றவளே தவி ராதகற்பரசே தவி ராத கற்புட னேயபுத்திர னுசத்திய நாதனைத்தரு, தாயெயணங்கர சே தவ ஞானசுந்தரியே தவ ராசவங்கிஷ மீதிலங்கிய வாயிதின்சுதர் சேசுநாயகர், தூயசெனக்கொளுவா மனே மேவுசிஷ்ட்டனையே யிரு தாள்விளக்கிய தேவநற்றசை சோரிபக்ஷண மாவளித்தவர், தோழருடன்செதுரோ ணதி யேகடந்தொருகா விடை சோதியுஞ் செப மேவருந்தவெ சூதெசென்றொரு சிஷன்யூதர்க - டங்கள் கைக்கின் பணவிலைக்கென் றிசைதலால். - - (வரு.)

சூதெசுமுப்பதுகா சுதெ ஞரிகைக்குறவே விலை சூதருக்குள வாகவிற்றிட நாறியக்கண மேயிருட்டொரு, சோலைவனந்தனிலே கொலை சூதெசின்பிறகே சில யூதருங்கொலை யாளரும்பிணி பாசமுங்கொடு வாளும்வேல்களு, மாயுதமுற்றவரா யதி தீவிரத்துட னே யடை யாளமுத்திசெய் தேகொடுத்திட மானமற்றிட வே பிடித்தவர், ஆனசுவென்பவரே டுகை பாசினண்டையிலே யதி பாதகங்களை யேபுரிந்துபி லாதுசங்கலவ யேவிமீளவெ, தாரொ டுகெட்டியையா யிர மேலடித்துமுளான் முடி சூடியக்கண மே கொலைக்கிரு சோரரொக்கவெ னுதனைக்கொடு, தோளின்மிகுந் கனமா யுறு நீளுமன்குருசெ சுமை யாகவும்பல வாதையும்புரி யூதர்சென்றக பாலமேருவி - லென்குருச்செசன் றனனனைக்கிங் கிவைசொல்வான். - - - - (உ.)

சேதிதவக்கருணு முனி வோனுரைத்திடவே செவி யூடுறச்சதி வேறுளைத்தன வேபிரக்கினை போய்மயக்கொடு, தேகநடுங்கிடவே யதி சோபமிஞ்சிடவே செக மீதிலம்புலி போல்விழுந்தழு தேமிகுந்துய ராகினுளனே, ஞாலமதிற்கொளுமோ பர நாடதிற் கொளுமோ திகழ் நானிலத்தர்கள் வானபத்தர்க ளுவொருப்பட வேயிசைக்கினு, நாவிலடங்கிடுமோ துய ரோதவும்படுமோ தவ ராசமின்கொடி யாள்படுந்துயர் நாடவும்பிர லாபமோடவள், சேரு சலெத்திருவா லய மீதினிற்சிமியா முனி நீடுகத்திக ளுடுமதைக் குமெ ரேறுதிவைத்திடு வாசகப்படி, தீவிரம்வந்ததுவோ வடி யாட னஞ்செயனே செகமீதிலுன்றனை யானிழந்துய லேதுதஞ்சமி லாதயானினி - யென்திரக்கம் படவுரைத்தங் குருகினுள். (உவரு.)

சேருசலெத்தெருவே யனை தேடியிட்புவிமீ திரு கான்முடச்
செவி நேமைகட்குருடீணமற்றிட வூன்மரித்தவர், சீவனடைந்திடவே
சதி சேர்கணங்களெலா மெரி தீயில்வெந்துற வேநவம்புரி தேவன
ன்சுத ஞாயூதர்கள், போதவடித்துமுளா முடி சூடியத்தெருவே
புய மீதினிற்பனையேசுமத்தியெ போனதித்தடமோகொலைக்கவர்,
போனதுகண்டிலிரோ விரு சோரர்தங்களொடே புகல் வீர்களெ
ன்றனைவாய்ப்புலம்பியெ போனமுன்குழு வாகவேயவள், சேறல்விழி
க்கெதிரோ சிலமாதருற்றிடவேயனை தேடிமெத்தவி யாகுலத்தொடு
தீவிரத்தினில் போதலுக்கவர், தேடிமயங்குவளா ரிவ ளாவியின்
கனைபா ரிவள் சோகமும்பிர லாபமும்புகல் சேசுவென்றவர் தாய
ராமென-வென்றுரைத்தங் கெதிர்வரக்கண் டனைசொல்வாள். (ஜ.)

மாதர்செருச்சலெமே விய தாய்தமக்கையரோ யடி யாளொருத்
தியெ னேயபுத்திரர் மாநிலப்பழி யால்கொலைக்கிரி, வாயிடை
கொண்டடைவா ரது நீரறிந்திலிரோ வகை கூறுமென்றனை யோத
மின்கொடி யார்கணின்றுசொல் வார்கடாயரொ, யாதனாயிற்சுதனு
ர்வர் சாயலெப்படியோ வடை யாளமெப்படி ரூபமெப்படி யா
முரைக்குமு னீவழுத்தென, ஆவையெனுங்கனிமா மரி யாளினஞ்
சொலுவா ளழ கானசெங்கனி வாய்முகஞ்சிர மானவஞ்சிறு ரோமம
ரோகைகள், வாலிபமுற்றவராய் வடிவோமிகுத்தவராய் மதி நேர்
முகத்திடை சாயலிப்படி வாலசித்திர பானுவொப்பென, மாத
வளுஞ்சொலவே மட மாதருஞ்சொலுவார் மரி மாதெயிந்தடை
யாளமொன்றிலை மாறுகொண்டது மேனியாகமு - மங்கிரத்தஞ்
சொரிதரச்சிந் தடியினால். - - (ஜஹு.)

வாதைசிரத்துமுளோ வவர் தோளினிற்பனையோ வலி யோடு
கைத்தல மேபிணித்துயர் மார்கழுத்திடை - யேவிசித்தவர், வாள்
கள்பிடங்குகளால் வலு வா நலிந்திடுவார் வசை பேசிமைந்தனை மார்
முகந்தனி லேயுமிழ்ந்திடு வார்கள்பாவிகள், சேசுவெனச்சொலு
வாரிவ னேவெனக்குலைவா ரிவன் மாயவித்தைக ளான்மிகுத்தபொ
லாததுர்ச்சன னாமெனச்சொலி, யினமறைந்திடுவார் வெகு தூஷி
ணஞ்சொலுவார் முக மீதறைந்தெரி போலழன்றுபொ லாதவஞ்
சக ரானயூதர்கள், வாள்கள்விதிர்த்திடுவார் பறையேமுழக்கிடுவார்
வலு வோடுகுப்புற வேவிழத்தளி யேயிழுத்திடு வாரதட்டிடு;
வார்கள் சினந்தெரிவார் வலி யூதர்தங்களொடே வரு வாருன்மைந்
தனை யேதொடர்ந்தழு மாறுகண்டெமை யோதுவாசக - முந்
எனக்கும் பிதிராருக்கென் றருமினே. (க.)

(இரண்டாவது வண்ணம்.)



தானதனத்தனனு தன தானதத்தனனு தன தானதத்தன தானதத்தன தானதத்தன தானதத்தன, தானதனந்தனனு தன தானதந்தனனு தன தானதந்தன தானதந்தன தானதந்தனந் தான தானன—தனத்தனத்தத் தனதனதந் தனத்தனு.

ஈரமரத்தினையே தழலாயெரித்திடுதீயுயி ரானதற்பமி ராமரத்தினை யேயதெப்படி யாயெரித்திடு, மீதையறிந்துணர்வீ ரெனவோது முன்சுதனூர் முக மீதிலங்குமி நீர்களின்கறை வேர்வையும்படுஞ் சோரியானதை, யோர்துகிலைக்கொடுயான் முக மேதுடைத்ததினு லதி ரூபமப்படி யேபதித்தசு ரூபமத்தைவி ரோணி கைக்கிடை யோவியமென்றதிலே யவர் சாயல்கண்டதினு லதை யோதகந்தனி லேமுகந்தனி லேயணிந்துகொண் டோதுவாளனை, யீனர்வருத்தியதான்முகம்வே றுபட்டதுவோ மகனேயெனச்சொலி யாகுலத் துடனேகுமப்பொழு தேதடத்திடை,யேயுதிரங்களொழா வொழுகா நனைந்தடியா னதிதேதுவென்றனை கூறவுங்கருணாகரன்சொலுஞ் சேசுநாதனை - நடத்திடப்பொற் பதமலரின் குறிப்பிதே. (ஹு.)

ஏகுவதெப்படியோ வவர்போதலெத்தெருவோ மகனேயிளைத்தனை யோதவித்தனை யோவெனத்துய ராயரற்றலொ, டேதினியென்புரிவே னென தாதியம்பரனே யும தேகநன்சுத னுரொன்மைந் தனை யீனர்கொண்டுசென் றேகவேயவர்,மேனிவடுப்படுமே தழல் வேலயிற்சுடுமே பல வேதனைக்கொடு தோளிடைக்கன மேதடத்திடை யேசுமத்திட,வேனின்மிகுந்திடுமே திருமேனிவெம்பிடுமே திரு மேனிவெம்பிவி டாய்மிகுந்தத னுல்விழுந்துநொந் தாவி சோருமெ, யீனரிழுத்திடவே நில மீதுறைப்புறமே யெளி யாள் வயிற்றினி லேயுதித்தவெ னேயபுத்திர னுரெயிப்படி, யேது யரங்களொடே மக னேநடந்தனையோ விடி யோபிரம்படி யோ பிடங்கிடி யோவிஷங்கொடுஞ் சூதரானவர் - பிடித்திழுக்கத் திரு வுடலம் பொறுக்குமோ. - - - (வ.)

சோரர்கொலைக்களமா னது தூரமெத்தனையோ துலை தூரமெத்தனை பாரொனத்துய ரோடுநற்கரு ணாகரத்தவ, தூயவனுங்கனிமாமரி யாளுடன்சொலுவா னதி தூரமிங்கிலை யேயடர்ந்தது ரோகர் வன்கொடுஞ் சூதர்சேவக, ரோகதிருச்சுதனு ரையி தோநடத்துகிரு ரிதிதோமுழக்கமிதோ சனுக்களி தோவிரைச்சலிதோ கொலைக்கள,

மேகிநடந்திடுவீ ரிவைதாமதஞ்செலுமோ வெனவேநடந்தன ளா
நிமைந்தனேயேதொடர்ந்திடுந்தாயர்காணவெ,சோதிதிருச்சுதனூர்
குருசோடுகுப்புறவெ யவர் சோபமுற்றவ ராய்வினைக்கொலை யூதர்
கைப்புடை யாலிடிக்கவே, தாயசுதன்றனையே தழு வாவணைந்தன
ளா யடி யூதர்வன்பொடு மேயிகழ்ந்துக பாலமென் றகுன்றேறியே
யவர் - கொலைக்களத்திற் சிலுவையையங் கிறக்கினர். - (வஹ)
சூதர்கொலைக்களமே விய நாதருற்றிடுதா, கம தோயகைப்பிர
சானபிச்சதை யேகுடித்திடவேகொடுத்தவர்,தோலுரியுண்டதிலே
சுத னூ தங்கமெலா மிகு சோரியின்கசை யேநனைந்துட னேயுலர்
ந்திடுந் தேகமூறுற, வாணமதைப்புதிதா கவெ யாடுரித்தனபோ
லுரி வோடுகர்த்தர் கை காறுளைக்கமு வர்ணிதைத்திரு சோரருக்
கிடை, யூணினரந்தரமீ துடலேகுலுங்கிடவே யுயர் வானினெந்தை
யொ டீனர்வெம்பிழை மாறவென்றிரந்தோதவேவெகு,தூறுமிகச்
சொலியே கொலை யூதரொச்சியமா கவெ தூஷணித்திட வேயிடத்
துறு சோரனெத்திட வேவலத்துறு, சோரன்வணங்கிடவே யுயர்
வானினந்தமொடே துலை யாதநன்கதி சேர்வையென்றனர் யூதர
ங்குநின் றூர்கடாய்மரி - வலப்புறத்திற் றுயரொடுநின் றரற்று
வாள். - - - - - - - (உ.)
சோரர்களுக்கிடையே சுத னுகர்த்தனையே மிகு தூஷணத்தொ
டு கால்கரத்திடையேயிருப்புமூளாணிதைத்தமெய்,சோரிசொரிந்
திடவேயுட லாவிதொய்ந்திடவே துயர் வாள்களம்புகள் சேரகந்த
னி லூடுழைந்துநொந் தேகதாதையொ,டேதம்விளைத்திடுவார் பி
ழை நீர்பொறுத்திடுவீ ரெனவேகநற்சுத னூர்தமைப்பலி யாவளித்
துமு னுளெசித்துவி, லேகபரன்சுதனே யிழி யூதர்தங்களை நீர் வி
லை யீனவெஞ்சிறை மீளவுங்க்ருபை நீர்செய்நன்றிகொன் றூர்கள்யூ
தரி,தோர்சிலுவைத்தருமே லுமையீனர்வைத்தனரோ சுதனுனதற்
பர னேயெனத்துயரோடுவர்ச்சிய தாயர்நிற்கவெ,சோதிபரன்சுத
னூர் குரு சோடிருந்தெழுவா சக மேபுகன்றுய ராவிதுஞ்சினர்
தீயவஞ்சருங் காணவேயவர் - மரித்திடத்திற் சிலநவம்வந் தடுத்
ததால். - - - - - - (உவ.)
சோபமுறச்சுதனூர் பணை மேன்மரித்திடவே துயர் சாகரத்தினி
றுயர்நிற்கவு லோகமொக்கவி யாகுலத்தொடு, சூரியனுங்களைசே
ரொளிபோயிருண்டதுமா சுறுயூதரஞ்சினர் பார்திறந்தகபாலமெ
ன்கலும் போழ்தலாயுற,வாதிமுதற்பரனூர் திரு வாலயத்திரைதான
து வேகிழிந்திரு கூறெனப்பட வாகுலத்தொடு தாயரற்றுவ',ளாவி

பிரிந்தனுவோ மகனேயிறந்தனேயோ யுனை யாளிழந்துமெ ஞவி கொண்டுழப் வேனென்றுநின் ருவிசோரவே, சோதிசடத்து விலா வினினேரிசத்ததனு லொருமூடனிட்டுர மோடுகுத்தவெ சோரி யொக்கநன் னீர்குதித்தன, சோபமுடன்கனிமா மத லேனவுங்க ருணு கர தாயனுந்துயர் மூழ்கவுங்கதிர் மேன்மறைந்தனன் கோடிமாழ்கிட - திருச்சடத்தைச் சிலுவையினின் றிறக்கவே. (௯.)

ஆரணசிஷ்டர்களா மிரு சீஷரக்கணமே திரு வாணிதைத்ததை யேவிடுத்துமெய் கீழிறக்கவி யாகுலத்தொடு, தாய்மரியங்கையிலே கொடு தாவிமைந்தனேயே மடி யாசனந்தனி லேயமைந்துற வே யணைந்துநொந் தேசொல்வாளிது, வேதவிதிப்படியோ முனிவோ ரொழுத்துகொலோ மிக வேழைபுத்திரனுகவிப்படி மீ துதித்துயிர் தானிழக்கவெ, பூமிசைமுந்தினரா மதமேவையின்பிழையோ வெ ன வேமிகுந்திர ளாயழுங்கணி ரால்வடிந்துறுஞ் சோரிமேனியி,லா டைவிடுத்ததினு லபி ஷேகமுற்றினளா யுயர் வானநற்கமழ் வாசவர் க்கமெ பூசிநற்றுகி லான்மறைத்தவர், பூதரநன்கலிலா மறை மீத மைந்திடவே செய லானபின்செரு சேலெயம்பதி போயடைந் தபின் சேசுநாயகர்-பிதிர்க்களுக்குப் பரகதியங்களிக்கவே. (௯௰.)

ஆதரையுட்புதைவா கியபாதலத்தினிலேயபிராமடிக்குறு வோர் பிதிர்க்களை வானுறக்கதி யேறுவித்துமெ, யானசடந்தனிலே யுயிர் கூடிவந்தறைவாய் திற வாவெழுந்துவிணேறியெந்தைபி தாவல ஞ்சிறந் தார்நிவாசமாய், மேதினிமுற்றிடுநாள் புவி மீதினிற்கதிர் சீர் மதி வீறுடுத்திர ளீள்கடற்றிரைபூதியத்தொடுசேர்மனுக்குல, தேகமெரிந்திடவே வட வாயெனுந்தழலா மனு மீளவந்தவ ராவி யங்கமொடேயெழுந்துறும் பாரிலேயுற, வாதிதிருச்சுதனுர் மு கில் வாகனத்தினிலே யவர் மேவவக்கண மேவலத்திடமாகநிற்பர்க டியர்துர்ச்சனர், பாவநிகழ்ந்திடவே வரு வாரினங்கடைநா ளவர் பாதசெந்தளி ரேநிதம்புரி பேறுதந்திடுஞ் சேசுநாயகர் - பொது க்கணக்குத்திருநடுவங் கியற்றுவார். - - - (௧.)

அன்னையின் பிரலாப வண்ணம் முற்றிறறு.



வலதுகரத்திலிடியேந்தி மற்றோர்கரத்தின்மறையேந்தி - *
இலகுஞ்சேனமலையதனி லெமக்குநிருபம்வகுத்தனனே. - - *
உலகிற்பரத்திற்பராபரத்தி லொடுங்காதடங்கா தளவில்லான் - *
அலகிற்கடவுளோர்கன்னி யகட்டிலொடுங்கி யடங்கினனே. - *
அருவாயளவிற் பரஞ்சோதி யநாதிசுதனு யகண்டபிரான் - - *
உருவாயொருதாய் மகவாகி யுலகின்மனுவா யுதித்தனனே. - - *
காந்துங்கதிரோனுடுமதியுங் ககனம்புவனமனைத்தினையும் - *
ஏந்துங்கரத்தானொருமடந்தை யேந்துங்குழந்தையாயினனே. *
விண்ணிலங்குநவசேனை வியப்புற்றிறைஞ்சக் கொலுவிருப்போன்
மண்ணிலெளியமனுக்குலத்தார் வசைவுற்றிறைஞ்சவிசைந்தனனே
அண்டகடாக முடைந்துசல மன்றுபெருகி மனுக்குலத்தார் - *
கொண்டகொடிய பவந்துறப்போன் கோபப்பெருக்க மறந்தன
ஆயவுகத்தின்கடைநாளி லகிலநடுங்கநடுவுரைப்போன் - [னே.
தீயநடுவுக்குடனுகத் தேவர்நடுங்கச்செயலென்னே. - - - *
அண்டம்புவனம்பாதாள மனைத்தோர்விரலா லசைத்திடுவோன் *
கொண்டசிலுவைசுமைசுமக்கக் கூனித்தளர்ந்து குறுகினனே. *
இன்றுகபாலமலைக்கோட்டி லிருகால்கரமுமோர்மரத்தில் - - *
ஒன்றப்பிணித்துக்கூரிரும்பே யுருவவறைய வுவந்தனனே. - *
மலைமீதுயர்ந்தசிலுவையின்மேல் வனசபதமுமிருகரமு - *
நிலையாயறைந்தமுளையுருவ நிறைசெம்புனலும்பெருகிடவே. *
கோபப்பெருக்கமறந்தவனே கொலைப்பட்டுயர்ந்தமலைமுகட்டில்
சோபப்பெருக்குமுறத்தனது சோரிவெள்ளஞ்சொரிந்தனனே. *
தலைசாய்ந்திருக்கவிடமுளதோ தரித்தமுள்ளின்முடிவருத்த - *
உலகாய்மனுவாயனுபவத்தி லுருகுமுருகுந்திருவுளமே. - *
தோயுமிரத்தக்கறையுடலுந் துரியவுமிழ்நீர்க்கறைமுகமும் - *
வாயின்கசப்பையருந்தியிதோ வருந்தும்வருந்தும்பரஞ்சுடரே.*
குவியுமலர்க்கண்ணீர்பெருகுங்கொடியோர்மொழியுந்தூஷணத்தா
செவியும்வருந்துமாறுதலாய்த் தேறுமிடமொன்றில்லையன்றே.[ல்
என்றும்பரத்திற்பிதாவலத்தி லிருந்தெவ்வுயிர்க்கு மூயிரளிப்போ
குன்றிற்சிகரங்குருசேறிக் கொலைஞர்நடுவிலிறந்தனனே. - [ன்
மேகசிங்காசனத்திருந்து விமலர்சூழநடுவுரைக்கும். - - - *
ஏகனெளியேங் குற்றமொழித் திணையின்முத் தியளிப்பவனே. *



துத்துயிற்ற நன்னயகருணையுடைத்துக்குதித்த கண்ணிணை - வளர்வோனே - கலைபலகற்றுச்சிறக்குமின்னிசை அமுதைவடித்துக்குடித்தமன்னவர் கவிதைவணக்கப்பதத்துமின்னிய - முதலோனே.

பனிமலர்ப்புட்பத்தை யளிகமழமொய்த்துற்ற பரிசெனப்பொட்டிட்ட - நுதன்மாதர் - பரவலைக்குட்சிக்கி யறிவுதட்டுக்கெட்ட பரவசத்திற்பித்தர் - குணமாக - உனது சித்தத்துக்கு மருவருக்கத்தக்க வுறுபவக்கட்டத்தை-யளவேனோ - வுசிதம்வைத்துச்சற்றுமனவிரக்கத்தைதச்செய்துபயபொற்பாதத்தை-யருள்வாயே-மனிதனைச்சிட்டித்து மவன்மதித்துப்பற்று மனைவியைக்கற்பித்துமொருநாலு - வரமளித்தொப்பித்து மவர்களிச்சைக்கொத்த மறுவின்முற்கற்றுற்ற - தலமான - கனதலத்தைச்சுட்டி யொருமரத்துக்கெட்ட கனியைமட்டுக்கட்ட - வவைமீறு - கடினகுற்றத்துக்கு நலிவெனப்பொற்புற்ற கழுமரத்திற்செத்த - முதலோனே.(ருஅ.)

கலகவிழியையுந் திலதநுதலையுங் களபமுலையையும் - நறைவீசும் - கரியகுழலையுஞ் சிறியவிடையையுங் கருதுநினைவுகொண்டொருபோதும்- உலையின்மெழுகெனு மடியனிருதய முருகியுருகிநொந் - தியன்மாத - ருறவைவிடுவதிங் கருமையருமையென்றழலுபிரமையென் - றொழிவேனோ - புலரியுதயமுங் ககனமதியமும் பொருவிலுடுவையுந் - தருவோனே - புனிதர்தொகுதியுங் கலைஞர்சபைகளும் புகழவமரர்தந் - தலையான - தலைவவொழுவரும் புவியிலரசருஞ் சகலவுயிர்களுந் - தொழுபாதா - சகளநிகளமென்றெவருமறிவருந் தகைமையுடையவென் - முதலோனே. (ருகூ.)

தளவமுகையெனு நகையுமஞ்சன மெழுதுகயலெனும் விழியுமந்திர தனுவைநிகரெனு நுதலுநுண்டுளி - முகில்போலுஞ்-சரியுமலரணி குழலுநொந்தசை சிறியகொடியெனு மிடையுமந்தர சயிலமெனுமிரு தனமுமிங்கித-முதலான - விளரியிசையயில் மொழியும்வங்கண ருறவுமுசிதமு முடையமங்கையர் விரகமதிவினை முழுதுநம்பிய - வறிவீனன் - விழலனிளமையில் நரகவெந்தழல் புகுதும்வழியிடை திரியும்வஞ்சக மிருகமெனுமவ மதியையென்றினி - யொழிவேனோ - எளியமனுவின துருவுகொண்டொரு பழயகுடிலிடை கழுதையுஞ்சின வெருதுமடிதொழு மதலை

யென்றினி - தெமையாளும் - இறைவர்குலமட மகளுமங்கவ தலைவனெனவரு பவருமன்புட னிருகைகொடுபர வியபதங்களை யுடையோனே - தெளியுமெறிதிரை வளையுமம்புவி முடியுமளவினி லமரர்நெஞ்சினு நினையவரிதெனு நடுவிளம்பிட - வருவோனே - நெடியவலகைகள் புறமிடும்படி சிலுவையெனுமர மிசையிருந தருள் நிமலவிமலவிண் ணவர்தொழுந்தனி முதலோனே. (சுய.)

சரீரசுத்திபெற முழுகுகுளிகளப பரிமளக்கலவை திமிரு நிலவுபொழி சலவைகட்டியுடு மணிகள்பணிகளணி - யரிதான - தவசைவிட்டுவிடு வயிறுநிறையவறு சுவைகளைப்பருகு சுளுகுபட மிலகு சயனமெத்தைமிசை யிருகண்வளருநெடு - நுதிவேல்போ லருகும்வாக்குவிழி மகளிர்கலவிநலம் வெகுசவுக்கியமுள பிரிதி தருமதனை யனுபவித்துமன மகிழ்திபெனவிரவு - பகலாக-வலகை சட்டமிடவதனை யிதுகபடமெனநினைக்க விரகினியுனருளையெளி தடைவதெப்பரிசிவ் வுலகமிசையெனவு - மறியேனே - பரமசுத்த முள வொருகன்னியைகுமர வமரருக்கிறைவ வுலகமிருகைதொழு பதயுகச்சரண வமலவிமலவுயிர்க் - கருணேசா - பரிமளிக்குநறு மலருமளியுமெனமருவுசிட்டரொடு சருவசனமுழுது பசியுறாக்க வவர் வயிறுநிறையவமு - திடுவோனே - சுருதியுட்பொருளு மரு ளுமடியனிரு விழிகளுக்கொளியும் வெளியு மெனமுறைசெ ல்துறைமனத்தகன கவிதைகொடுகவிஞர் - புகழ்வோனே - துரிதநிக்கிரக வடியனுடையபழ வினையறுத்திதய கமலமலரவரு சுடரொளக்கருணை பொழியுமுகிலனைய - முதலோனே. (சுக.)

நானவாசமணக்கு மணங்கமழ் மேனியேறவெடித்த பறங்கி கள் நாசியூடுகிளைத்தகிரந்திகள் - சலமோடி - நாறவூருபுழுக்கள் நெளிந்தொரு கோடிபீயுமரிக்கவிரும்பிய நாரிமாருநகைத்து மி ழும்படி - யதிரூப - வீனமாகியனைத்துமறந்துடல் பாதியாகிரசு ப்புகையுண்டுற வீரலோடுகுடற்கருகுங்கன - வனல்மீள - எழு தாளுமெடுத்துவிழுஞ்சல தாரைபாயவிறைக்குமுடம்பிதை யேது பாவிமினுக்குமரும்பய - னறியேனே - தேனிறுவுநெருப்பி லிடு ஞ்சிறு மீனுமாகவுயிர்த்தபினும்பயில் சீஷரோம்புசிக்கவிரும்பிய குருநாதா - தீயபாவவசுத்தநிரம்பிய பேர்கள்வாழவனுக்கிரகமுஞ் செய சீவனுதியெனச்சரிரந்தனை - யருள்வோனே - ஆனசேனை ஞ

திக்கவரும்பிரபு ராசராசகுலஸ்திரிசம்பிரம வாசையோடுவளர்க்க-வளர்ந்தருள் - சிறுபாலா - ஆதியாகியனைத்துயிருந்தரு சோதியாகி யிருக்குமரும்பொரு ளானதேவபரத்துவசுந்தர - முதலோனே.

பாவவுலகத்தைநம்பி ஞானநெறியைத்துறந்து பாசவினை யிற்படிந்து - கொடிதான - பாழ்நரகவுக்கிரமண்டு தீயினில்விழத்துணிந்த பாதகனைநிக்கிரகஞ்செய் - தழியாதே - சீவனொடு வைத்திருந்து மேலறிவதற்கிரங்கு தேவவருளைப்பொருந்தி - நிலவாழ்வு - தேடுவதைவிட்டொழிந்து சோதனைகளைக்கடந்து மே னுலகவிச்சைகொண்டு-பிழையேனு - சாவுழுவைநற்றவஞ்செய் பாவுவெனப்புரிந்த தயாபரமெனக்கிரங்கு - தயையாளா - தாயினுமுருக்கமன்போ டேயெனைவளர்த்ததந்தை தானெனவிரக்க நன்றி - யுடையோனே - தூயமுடனற்பசும்பொன் மீறையிலை வைத்துநின்று சோதிமுடிபெற்றிருந்த - பிரகாசர் - சோபன மூறாத்திறைஞ்சு பாதசரணச்சவுந்தர தூயவருள்வைத்திருந்த - முதலோனே. (சுங.)

மைக்கண்மோகன மங்கையர்காம விச்சையான நெடுந்தழ லூடு வச்சிரமானவென் னெஞ்சுமேமீது - மெழுகாகி - மட்டிலா வருமந்தமெய்ஞ்ஞான நித்தியவாழ்வையிழந்தழியாத வஸ்துவாக விருந்தபிரானுநரற்கான-துக்கவாடையடைந்துபிரகாசம்அப்பிர காசமுறைந்துகொடூர துர்ப்பசாசரிடும்பொடுவேகு - முதலே தான் - சுத்தனுகநடந்துசரீர வற்பவாசைமறந்திமையோர்கள் சுத்தமானவருந்துணையோடு - மருவேனு - திக்குலோகவசுந்தர வாழ்வை விட்டபேர்களிடும்பலிபூசை திர்த்தியாகவிரும்பியவாதி -பரநாதா • சிஷ்னுகவிருந்ததுரோகி விற்றபோதுமனஞ்சலியாத சித்தமோடுமிரங்குதயாப - முடையோனே - புக்கையோடுவெறுந்த விடெனு மிட்டுணுதசெழுந்தனிலோபி புத்தியோடுநடந்திடுமாறு நெறியோது - பொய்ச்சன்னுசவருந்தவவேட மற்பபசாசுகொளும்படியேவு புட்பபாதபுரந்தரனுன - முதலோனே. (சுச.)

உலகமாஞ்சிலுகை யலகையாம் பகையையுடலமாஞ்சனியை யனையாள - நுரிமையாத்தனையை மதலையாங் களையை யுடைமை யாங்கடுவை - யுறவாடி - யலுவலாங்கொடிய பவமெலாந்தமிய

ணடையவாழ்ந்தரிய - வுயிர்வீய - வழுலெல்லாங்குழுமு நரகமாங் குழியி லடிமையீங்குறைய-முறையாமோ - வலிமையாங்குருவின் மனிதனும்பயலேவலதுபூஞ்செவியை - யறவீசு - வயிரநாந்தகனை நிலமெலாம்பரவவரிசையாந்தலைமை- யருள்வோனே - யிலகுவான் கதியி லமரர்தாங்கிசை கொண்டினிமையாங்கவிதை - பலபாட - வெளிமையாஞ்சிறிய மனிதனும்பிறவி யிறைவனுங்கருணை - முதலோனே. (சுரு.)

வரியளிதூங்குமாலை சொருகியகூந்தன்மாதர் மதிமுகவாஞ்சையான - வதிமோக - வலையிடைபாய்ந்தமீனி னிடர்பல தாங்கிநாளு மனவலிதேம்பிவாடி - நிலமீதே - ஒருதுணைகாண்கிலாத தமியனையாய்ந்தஞான வுறுதியில்மேம்படாத - வினையேனை - புலகொருமூன்றுமோரு நினைவொடுதேடொத ருறவுசெய்பாங்கிலாள்வ - தொருநாளோ - அரவுகள்தீண்டுமால விடமொருதாம்பிரநாக வணிநிழல்பாய்ந்தபோதி - லறநீடு - மதிசயமாஞ்சகாயவுதவிசெய்தோங்குசூத ரவர்குடிமீண்டதேவ - சருவேசா - இரவிடைகாந்திவீசு பணிமதிதாங்குபாத விறைமகளீன்றபால - பரலோகா - விளவெயில்கான்றசோதி மணிமுடிவேந்தர்பாட லினிமையைவேண்டுமாதி - முதலோனே. (சுசு.)

மாமதிமுகத்தியர்க ளாசையொருசொற்பநிலை வாழ்வுகனதுக்கமலி - சிதமான - வாலிபம்வியர்த்தமவருதேகமுமநித்தியமுயல்வாணிபமவத்தமினி - வெகுகாலம்-நாமினியிருப்பதுபொய் சாவுவரல்சத்யமென நாடொறுநினைத்துருக முடியாதே - நாயடியனுக்குனதுசீர்பததுணைக்கமல நாண்மலரளிப்பதினி - யொருநாளோ- காமருவுநச்சரவு ழூர்மெலியவட்டைசிறு கால்தவளையொக்கவொரு - கலைநீளங் - காணவிதைவெட்டவினி நீபுசியெனப்பெரிய காரணமுரைத்தருளு - மசரீரி - வாமமலையப்பர்செவி யானதில்விழப்பகரு வானவவனைத்துலகு நிறைவோனே - வாரிதிநிலத்துமுக மூடிமிருளோத்தபல மாயையையறுத்தருளு - முதலோனே.

வடுவையொக்குங் கடுவையொக்குங் குவளையொக்குங் கணையையொக்கும் அலையையொக்குங் கயலையொக்கும் - விழிமாதர் - மதியையொக்குங் கமலமொக்கு முகமினுப்பென் மனதுருக்கும்

வசனமொக்குந் தழலையொக்கு - மதனுலே - படுகொலைக்குங் களவினுக்குங் கனபகைக்கும் பிறர்நகைக்கும் பலவகைக்கு முடலெடுத்தும் - பழிபாவி - பரிதவிக்குந் துயரினைக்கண் டிதைவெறுக்கும் படியிரக்கம் பரிகரித்துன் சரணபற்மந் - தருவாயே - கடிமலர்த்தண் பொழிலிடத்துந்தையையிரக்கும் பொழுதொழுக்குங் கறைவெயர்க்கொண் டடல்களைக்குந் - துயராளா - கடுவினைக்கொண் டிழிஞர்வைக்கும்முடிபொறுத்தும் பசுநிறப்பைங்கழைபிடித்துமரசிருக்கும் - பரியாசா - புடைபுரக்குஞ்செழுமலர்க்குண் டகழுடுக்குங் கொடிமதிற்றின் புரிசைசுற்றுஞ் செருசலைக்கண் - டெருவூடே - புவியனைத்துந் தழையவைக்குஞ் சிலுவையைச்செந்துளிதுளிக்கும் புயநெளிக்கும் படிசுமக்கு - முதலோனே. (சுஅ.)

நாலுநாளைக்குலகில் வாழும்வாழ்வற்பர்நெடு நாளிராதித்தையொரு - பொருளாக - நாடிநாடிப்பெரிது கோடிதேடக்கருதி ஞானவாழ்வைக்களையு - ம்றிவீனன் - மூலமாயத்திமிர நீலபாவப்படல மூலவேதத்துணர்வை - யுணராது - மூடனுய்விட்டதமியேனையாளற்கருள்செய் மோனஞானக்கிருபை - புரிவாயே - மேலைவானத்துமிகு சாதிரூபப்பருவை மாயரூபத்திறெடு - மனுரூபா வேலைஞாலத்திலுயர் சூதசாதிக்கிறைவ தேவசாரத்தையருள் - குருதேவா - காலகாலத்துமழி யாதசோதிச்சுருப காரணவெப்பொருளு - மடிபேணுங் - காரணயுக்தகுண காரணசுத்தமன காதலாதற்பரவென் - முதலோனே. (சுகூ.)

தாயத்தையுங்கொண்ட தாரத்தையுஞ்சங்கு சாரத்தையுஞ்சிந்தை - மறவாது - சாவுக்குமிங்கெந்தன் வாழ்வுக்குமுண்டென்று சாதித்தவன்பேறா - யவகாரி - காயத்தினின்றுென்று சீவத்தொடுங்கந்தி காலத்திலெங்கென்று - தெரியாத காயக்கமென்கின்ற மாயத்தைவென்றங்கிகாரத்தொடுன்பங்கு - பெறுவேனே - பேயைச்செயங்கொணடு லோகத்தைவெல்கின்ற போதத்தருஞ்செங்கை - தொழுபரதா - பிறற்பழங்கந்தை சூழப்பொதிந்தண்டர் பேணப்பிறந்தன்று - மனுவாகி - மாயத்துரங்கொண்ட பாவத்திறங்குன்ற வானிற்பிரியங்கொண்டு - நரசீவன் - வாழச்சுரந்தன்பு பாவித்திரங்கின்ற வார்வ்த்தனங்கொண்ட - முதலோனே. (எ௰.)

இருகணருவி பொழியவொழுகி விதயமுலையின் - மெழுகாகி - யிளகவிளகி யுருகவுருகி வினிமையடைய - வொழியாமல் - அரியதபசு புரியவுலக வலகைசரீர மெனுமுழவ ரகலவிலகி பரமவழியை யறியுமறிவை - யருள்வாயே - சுருதியியவுள் பகருமுனிவர் துழனியதிர - வமரேசா - தொகுதிபரவ வடியர்சபைக டொழுது தொழுது - பணிபாத - மருவுநசரை நகரிதழைய வளருசிறிய மனுருபா - மரியினரிய குமரசருவ வரமுமுடைய - முதலோனே. (எக)

ஆசைமனையாளும்பொய் தாய்தமர்கடானும்பொய் ஆளடிமைதானும்பொய் - நிதியீகை - ஆயிரமுநூறும்பொய் மாயவுடல் தானும்பொய்யாருடையவாழ்வும்பொய்- இனியோதுஞ - பாசமதிலேயிந்த வாழ்வுமொருவாழ்வென்று பாவிமனமேநம்ப - முறையாமோ - பாருலகவாநந்த நீரிலினிபேரின்ப பாதமலரோதந்து விடுவாயே - பேசரியமூதண்ட கோணமுதலாயைந்து பேருடையபூதங்க - டருவோனே - பேய்பிடியிறொனுந்த ஆமனுடன்வாய்விண்டு பேசவருளாநின்ற - பெரியோனே - பூசைபெலியாலன்பர் சேவைபுரியாநின்ற பூரணபிரசாதங்க - ளுடையோனே பூமலிதடாகங்கள் சூழுநசரோனென்ற போதநிறைபேரின்ப - முதலோனே. (எஉ)

தீதொன்றுதென்றும்பேரின்பானந்தந் தேடுங்கோகண்கண்டறியீரோ - சேனங்காரண்டங் கோதுங்கூன்முண்டந் தேகந்தானென்றிங் - கறிஞோர்கள் ஓதுஞ்சாரஞ்சந் தேகம்போலுன்றன் றாலஞ்சாலங்கந் - தனைநாளும் - ஓரன்பாய்நம்பும் பாசந்தானென்றிங்கோயும்பாதந்தந் - தருள்வாயே - தாதுண்டால்வண்டும்பூவும்போல்நின்றுன் றுணண்பார்துன்பங்- கடிவோனே - தாளும்பார் வஞ்சஞ் சூழும்பேய்துன்றுஞ் சாலந்தான்வென்றிங்- கெனையாள்வாய்- போதஞ்சேருஞ்செங் கோவின்கோவிஞ்சும் பூவின்பாலின்பம் புனைவோனே - பூமந்தாரஞ்சந் தாரஞ்சூதந்தண் பூகஞ்சேர் வெல்லை முதலோனே. (எ௩)

வரிக்குயிலோவனக்கிளியோ வனப்பெடையோ - நறைவீசும் மலர்த்திருவோ குலக்கொடியோ மடப்பிடியோ - வெனவாணர் - திரைத்தொடியார்வனப்பையெலாநிகழ்த்தியகா . வியநூலை நிலைக்

கொளமேவ படித்தடியே னெருப்பினிலே - விழுவேனோ - பரப் பொருளே தயைக்கடலே படைத்தவனே - யடியார்கள் - பவக்க டனீர் சுவற்றியதோர் பதத்துணையாய் - படிமீது - தரித்திரமா மனுச்செனனு தனித்தனியே - நவகோடி - சபைப்பெரியோர் தொழப்பரமாசனத்தில்வளர் - முதலோனே. (எசு.)

பணமும்பொருளுந் தலமுங்குலமும் பரியுங்கரியும் - உலகாளும் - பவுசும்பலனுந் திறமுஞ்செயமும் படையும்பகையும்-பிரியாத • துணையுந்தருமந் திருவுஞ்சுதருஞ் சொயமன்றிலைநம் - புதலாலே சுகிர்தஞ்சிறிதிங் கிலையுன்சரணந் துணையென்றருள்தந் தருள்வாயே - இணையொன்றிலனென் றெவருந்தொழமண் டிடரும் பழியுந்-தொடராதா -ரிதயங்குடிகொண் டுறையும்பொருளென் றிலகும்பரவெங்களையாள்வோன் அணியுங்கதிர்தங் கியமங்குலனின் றமுதம்பொழியு- முபதேச -மருளுங்குருவென் றுருவங்கொடுவந் தகிலம்பரவு - முதலோனே. (எரு.)

காமவிகாரச் சிங்கிவைத்திளை ஞோர்மனவாசைப் புண்படப் பல காலுமுபாதிக்குந்திறத்திகள் - நெடுநீர்சூழ் - காசினிமீதிற்பெண்பிறப்பினி லேவிபசாரச் சங்கையிற்பழி காரிகளாகச் சஞ்சரித்திடு - மடவார்மேல் - மாமயலாகிச்சிந்தைவைத்தவ தூறுருகோடிக்குண்டுகட்டியு மாயைவிடாமற் கொண்டலைத்திடு - மதனாலே மாதவர்காயத் தன்புவைத்திடு தாள்பணியாமற் றன்பமுற்றுயிர் வாழ்வினைமேபனுக்கென் றருட்கிருபை- புரிவாயே - தாமனைவாவிச் சங்கினத்தெர்டு கூன்முதுகாமைக் குஞ்சநெற்குலை சாடியசாலிற் கண்படுத்திடு - நசரோயாய் - தானவனுய்மற் றெங்குமொக்க நிராமயமாய்திற்கின்றசற்பிர சாதவிலாசச்சங்கமர்ச்சனை . புரிவோனே பாமறைவேதத்தெங்கள்சற்குரு தேசிகசோதிச்சுதந்தரக்கிரு பாகரபாவப்பந்தமறப்பமு - மணுகானே - பாய்கதிர்வேலைக்கொண்டுகுத்திய காயவிலாவிற் செங்கைவைத்திது பானொனவோதிச்சந்தொமைக்கருள் . முதலோனே. (எசா.)

அளவிலர்தசகலதன்மை சொருபமானகடவுடன்னையடிதொழாதமனிதஜென்ம - மதிலேயோ - ரறிவிலாதமிருகமென்ன நிலையில்லாதவுலக்புன்மை யடையும்வாழ்வைமிகுதியென்ரணி - விருதா

வில் - இளமைமாறிவயதுதுன்னி யவதிநாளுமுடுகியெண்ணி இளை
கொளாதுகிடையுநண்ணி - விழும்வேளை - இனிமையான தவஞ
தன்ம முயலுமாறு துணிதலின்மை யெணவொணுதபிரமையின்ன
மொழியாதோ - களபவாடைகமழுமெண்ணெய் சரணமீதுமெழு
குமின்னை கருதொணுதகொடியதீமை - கெடமீறு - கருணையான
பரமவுண்மை யுறைகொளாத புலவர்சொன்ன கதைகளான சமய
பன்மை - யறஞான - வளமையான சுருதிதன்னை யருளுதேவகுரவ
கன்னி மரியைபால புருவையன்ன - குணசீலா-மறுவிலாதவியவுள்
வெண்மை பிரபைவீசுவழுவில்வண்மை மனிதரோடுமொருமை
பண்ணு - முதலோனே. (எஎ.)

தண்டைசிலம்புகலீரொனப்புனை சொண்டைகுலைந்தலையோ
விடக்கர சங்கமுழங்கநிலாநுதற்குறு - வெயர்வோடத் - தந்தன
தந்தன தானதந்தன வென்றுபதஞ்சொலிநாடகப்பர தம்பயில் வி
ந்தையிலேயுருக்கிடு-மடவாரை-பண்டுதொடர்ந்தமகாமயத்பிரமை
யின்றளவும்பிரியாதலைத்திடு பங்கம்விளம்பிடிலோவுரைத்திட - மு
டியாது - பஞ்சபுலன்களினுலுயிர்க்கொரு நஞ்சுகலந்தனபோலெ
னக்குறு பந்தபவங்கணிவாரணப்பட - வருள்வாயே - தெண்டிரை
மண்டியகோ சரித்திரள் வண்டலில்வந்துபடீரொனப்படு செங்க
டல்பங்குசெய்தே கொடுத்திடும் - வழியாலே - சிந்தனையொன்
றிலயூதர்தப்பவும் வந்தபெரும்படைமேசாபமுற்றுயிர் சிந்தவுமெ
ன்றொருசாபநிக்கிரக - மருள்வோனே - விண்டலமண்டலசோப
ணப்பிரிய சந்ததமன்புசெய்வார்தமக்குறு வெம்பிணிதுன்பவிகார
மற்றுள - வினைதீர - வென்றிபுரிந்தருள் காருண்யப்பிரிய சங்க
சொயம் பிரகாசநிர்க்குண மெய்பதபங்கய வேததற்பர - முத
லோனே. (எஅ.)

தலையடங்கவு நரையாய்நடு முதுகெலும்பற வளைவாய்நடை
தளரநொந்தொரு முடமாய்வெகு - கனமான - சதைகரைந்துறு
வரடாய்விழி பிரபைமங்கியகுருடாயொரு தடியொடுந்திரிகிழ
டாய்திணை -வெடிநாறும் - புலவுவெண்டலைமுடையாய்மல சலநி
ரம்பியகுழியாய்வெகு புழுநெளிந்திடுமறையாய்பதி - வுறுமாய
புலைபுடம்பிதைநிலையாவென நினைதுற்பிரமைய கலவருள்புரி
யவுன்பதமலரோயினி - யருள்வாயே - அகிலமம்பரமுதலேபல

வுயிர்பணித்திடு பரனே தினமமரர்கும்பிடுசரணலய -முடையோனே - அனையெனுங்கனி மகவேதிரு மறைவிளம்பியகுருவேதினமதிசயம்புரிபவனேயுயர் - சருவேசா - உலகநிந்தனையணுகாமனுமகவெனும்படிவருவோய்கதி ரொளிவிளங்கிடு கிரணோதய - தயவோடும் - உறுதிகொண்டவரிதயாசன கொலுவிருந்திடு மரசாய்வரு வுயிர்பொருந்திடு கிருபாகர - முதலோனே. (எகூ.)

உலகசஞ்சாரமேதிலைகொலென்றுசையேயுடலினின்றுவியேகிடுபோக - ஒருவன்வந்தானுகி லபயமென்றுலுமே யுதவியுண்டாகுமோ -அமராடு-சிலையிருந்தாவதோ கணையிருந்தாவதோ திடமிருந்தாவதோ - தினமேறு - சிவிகைகொண்டாடுமோ குதிரைகொண்டாடுமோ தெளியினுன்பாதமே - தருவாயே - வலையிடும்பேர்களா யறிவிலும்பேதையாய் மனதிலுங்கோழையாய் - வருவோர்கள்- வரமுறுஞ்சிஷரா யெவரிலுஞ்சூரராய் மனுவிலுங்கியானராய் - முதுஞான - தலைமையும்பேறுமாய் பெயருமுண்டாகவே தயைசெயுங்காரண - மனுரூபா - சகலமுந்தானலாதிலையெனுஞ்சீர்மையே தழையநின்றேகமா - முதலோனே. (அய.)

பொருகரிக்கொரு வாதோரண னென்மனத்தறிவாலேயுறுபுலனடக்கிய வாவேசனை - முதலான - புரையறுத்துமகாமாதவவிரதநிட்டையிலேநாள்விடுபுனிதருத்தமராஞேர்தமை-மருவாதஇருவிழிக்கயன்மானார்குணசரிரமெச்சியகாமாதுரவிளைஞர்பட்சதுராராசனை - யதிமோக - இருதயத்தலைவேசாரியை வெறிமயக்கமாசாலனை யினியுனக்குமொராளாம்வகை-புரிவாயே - பரமசத்திய ஞானகம வுலகசக்கரசிவாசன படியளக்குமுதாராகரவரூபா - பரிதியொப்பனையாகாநிறை யொளியைமுற்றிடுகாயாவெமர் பகைதுடைத்தருள்கூர்மானுட -வடிவாளா - விரிநிலத்துளராசாதிபர் குல சுபத்திரபூசாபல விகசிதச்சிறுபாலாவுயிர் - தொழுவோனே - மிருதுபற்மபதாதாபர சமயவிகசின போதாவருள்விநயநிற்குமநாதாதனி - முதலோனே. (அக.)

வயிறுபருத்தாதிப்பாழான உடலைவளர்த்தாசைப்போராடுமகளிர்களைக்காமித்தேகோடி - நிதிதேடி - மணிமதிலசுற்றேறச்சூழ்மாட வரமனையைப்போலச்சூதான மனையுமெடுத்தேகட்டாய்

வாழு-கிளையோடு-தயவுபரித்துரிற்பேர்போன பெரியவர் செத்
தார்செத்தாரோதுசலுகையமற்கே தொட்டாநாளு-மிதுபூசை-சரி
ரமெடுத்தாலொப்போதாதா வுனதுதிருத்தாளுக்காளாதல் தகை
மையதைப்போலப்பேறேது - புகழ்வேனோ - வியனுலகத்தோ
ருக்காதார வமரர்சபைக்கோர் கர்த்தாவான விமலகணப்பூதப்பா
தாள -வுலகோர்கள் விருதுபறித்தாணிக்காலேறுசிலுவைமரப் பா
டத்தால்ஞான விசயமெமக்காகத்தானு - மருள்வோனே-நயன்
வருட்கோலத்தாயாளு முபயதிருப்பாதத்தாய்பாவநசையையறுத்
தாருக்கேவீடு-தருவோனே - நறுவியநெட்டோலைப்பூநாறு வரிம
ணலிற்சூழச்செல்பாயு நசரைநகர்க்காதிக்காதேவ - முதலோனே.

பாரிற்பெற்றுவளர்த்ததாயினு நேசப்பற்றுவுனக்கென்மேலு
ள பாவத்துக்குமுனக்குமேபகை - யதனாலே - பாவிக்குற்றதரித்
திரநோய்பிணி தீரத்தக்கதலப்பொலாவ்கப் பாசத்துக்கவலைக்கு
ளாகிய- மதியீன- னீரச்சுற்றவருட்கணாலருள் கூரச்செப்பவிலச்
சையாயினு மேழைக்கற்ப விரக்கமேசெயி - லடியேனும்-ஈனப்
புத்திமயக்கமாகிய மோசக்குற்றமினிச்செயேனடி யேனுக்குற்ற
துணைச்செய்தாள்வது - கடனுமே-சாரற்பற்றிமுகிலிற்கோள்மழை
தூவப்பட்ட விருட்டிலேபிர தாணிக்கர்ப்பு மரிக்கொர்சேயென
வுருபாலா - வேரிற்புஷ்ப மனத்தர்தாடொழ நீர்மைப்பத் தரு
ளத்தனேமறை வேதத்தர்க்கவ்விதித்தவாய்மல - ருடையோனே
வேலைச்சுற்று நிலத்திலேயுள பாவக்கொட்ட மகற்றவேபிர வே
சித்தற்பமறுத்தகாரண - முதலோனே. (௮௩.)

உற்பலத்தைக்கயலை விற்சரத்தைப்பிணையையொக்குமைக்க
ட்குதலை - மடமாது - ருற்றபற்றிர்றயவு மொப்பனைக்குத்திமு
முட்கருத்திற்கவடு - முணராதே-அற்பவிச்சைப்பருவ ரசசுகத்
தைக்கருதி யச்சமற்றுத்திரியு - மடியேனை - அற்புதத்துக்குரிய
பொற்பதத்தைப்பணியு மர்ச்சனைக்குக்கருணை - புரிவாயே - கற்
பனைக்குக்கருணை வைப்பினுகற்றதயை நற்பரத்திற்பலனை-யரு
ள்வோனே - கத்துவட்டப்புவன முட்டமுட்டப்பரம ... யத
தைப்பகர - வருவோனே - முற்பவத்துக்குலகி லுத்தரிக்கக்கொ
லைதீ தொக்கநிற்கப்படுமெம் - பிணையான-முத்தலத்துக்கொருவ
சுத்தமுத்திக்குரிய முத்தருக்குத்தலைவ முதலோனே. (௮௪.)

உலகத்தலக்கணுறு சனனப்பிறப்பில்மனு வுடலுக்கடுத்தபல பொருடேடி - உலகக்கருத்துவரு மொழியத்தனக்குரிய வுடலுக்கியற்றபிர - பலமான-தலைமைத்தவத்தின்மிக முயலப்பலத்தமன தயவெட்டுணைங்கும்வர - வறியாத - தமியர்க்கிலச்சைவரு வழியைத்தகைத்துனது சரணத்துணைக்கமல - மருள்வாயே - அலையிற்படித்தகயல் குடரிற்கிடக்குமணி யதனைக்கொடுத்துவிர - வலரான அவர்கைத்தலத்தில்வரு பொலிசைக்களித்தபொரு ளதையுத்தரித்தருளு - சிறுபாலா - புலரிற்கதிர்ப்பிரபை சுடரச்சுடர்ப்பரிதி புவனத்திருட்டகல - வருமாறு - புகலற்கிலக்கமறு மளவற்றனைத்துமடி புகழப்பிறக்குமனு - முதலோனே. (௮௫)

மணிநாழிகைவட்டஞ்சிறு பிறைவாய்மயிர் பற்றுஞ்சுடர் மழுவார்கர துட்டன்பொரு -கொலையாட-வருநாளையினித்தஞ்சிறி தறியேனிது திட்டந்தனி மனமானதை நித்தம்பரு-வரலோடு - இணைமாமலரொக்குங்கரு விழியாரொடுசுற்றந்தம ரெனும்வாழ்வினில் வைக்கும்பரி - சனையேது - இனிமேலிதை விட்டுன்பத மலரேதொழுதற்கிங்குறு எளியேனைவளர்க்குந்தயை - புரிவாயே - பணியாதவர்சித்தந்தனின் மிதியாதிருப்பங்கய பதனேயவனிக்குங்கதிரொளிவீசும் - பரலோகர் தமக்குங்கட வுளனேநரகச்செம்பொறி படுதீயிலிருக்குங்கொடி - யவரான - கணமாயையறுத்தெங்களை வெகுமானமளித்தன்புசெய் கருணாலயயுத்தந்திய-மதிமேய - களராநிறையிட்டங்கொடு மலர்வாய்மணிமுத்தங்கொடு கவுளாரருமைச்சந்ததி - முதலோனே. (௮௬.)

அறிவீனனீசவஞ்ச னெறிகேடன்வீண்ன்வம்ப னதிமோக தூறனன்றி-யறியாது-அவகாரன்லோபன்முண்டன் விருதாவிரோதியென்று மநியாயகாரன் வஞ்சன் - மனதூடே - பிரலாபமான துன்ப விருண்மூடிஞானமென்ற பிரகாசமானதொன்று - மணுகாதே - பிரமையாகியேமயங்கி யுழலாதுநாகமுந்து பிரகாரமானதென்று - பெறுவேனோ - திரிகோணசோமசந்திர னொளிமீதிலாயகண்ட சிறுபாலனாயிருந்த-பேரியோனே - ஜெகலோகமேலையண்டர் முதலாகவேவணங்கு திருஞானவேதமந்திர - விதியாளாகிருபாகராசுதந்த்ர குணசீலகாவிலங்க கிரஞ்ஞையாபரந்த - புவிமீதே - கிளர்பாவ பாசசங்கள் வெளிபோனமேய்மதங்கள் கெடிபோகவே துர்ந்த - முதலோனே. (௮௭.)

ஆலவேல்விழி மங்கையர்மோகவி காரலாகிரி கொண்டதிரு லறிவார்சொன்னலுமென் னெஞ்சினிலேசிறி - துண்ராதே-யாவ லாதிபுரிந்தலையாமலை தூறுமேபலருஞ் சொலுவாரறி யாமனன் முகமன்றியநேரமு - மிதுதானே - வேலையாமதி மங்கியகாமுக னைபாவியைவஞ்சகனுமொரு வீணனுமெனை யன்புடனேயிரு சரணை -மேவவே மனதும்பிரதானமதானமேதோர்துணிவும் பெற வேயினி மேலுநீயெனை யன்புசெய்தாளுதல் - கடனுமே - சோலி யாகிய வென்பவமானது தீரமாதுயர்மிஞ்சிடவேயொரு தூணி லேசதை நைந்திடவேயடி - பலமோதி - சோரியாறுகள் சிந்திய தோர்திரு மேனியானது நொந்திடவேயோரு தோளிலேகுருசுங் கொடும்பாம்வழி-தனிலேதான்-ஞாலமேன்முக மண்டிடவேவிழு தேவனேபர மண்டலவானவர் நாதனேயுனை நம்பினபேர்களை -யக லாத - ஞானமோனக வஞ்சலனேசரு வேசுராமறுவின்றியபூரண நாயகாவருள் பொங்கிடவேயருள் - முதலோனே. (அஅ.)

அலையிடுமுலகமயக்கிலே யிரணியநிதியநெருப்பிலே யரிவை யர்கலவிமயக்கிலே -பலநாளும் - அறுசுவையுணர்வின் வியப்பிலே பிறவழிபவுசு சுகத்திலே யவமதிவிரத நடப்பிலே - மனதோடுந் தலையிடுவிழல னிடத்திலே பவமலதுறுதி யிருக்குமோ சருவமு முடைய வொருத்தனே-யினிமேலுன்- றனதருளடைய உரத்திலே நினைவதுபெறவு மிரட்சைகூர்தவ வுறுதியுமுனது பதத்தையே யருள்வாயே- தலைபயில் கலகமதத்திலே வினைபலபழகுமகத்திலே கருதருமகுதை யினத்திலே -யுறையாதாய் - கரவறுமுனிவர் கருத் திலே தவமுனிதனதுகரத்திலே கனிமரியரியவயிற்றிலே யுறை வோனே-இலகொளிபடரு பொருப்பிலே தருவினிலெரியுநெருப் பிலே யிடமுறுசிலுவைமரத்திலே - யொளிர்வோனே - இருமையு முதவியளித்தவா பொருவறுபெருமையடைத்தவா இசைகொடு நவ் துதிக்கவேவரு - முதலோனே. (அக.)

முத்திப்பர கர்த்தத்துவமுள சத்திக்கிறை யற்றுக்கொரு பொருள் மூர்க்கத்திறி சித்தத்தெரிசன - மோசேசு - முட்டத்து யர் பட்டசசினமலி முப்பத்தெழுமற்றத்தினமணி முக்கட்பரனைக் கைக்குள்வரு - நிறைவேதம் - பத்தித்திரு முத்தித்தவநெறி முற் கற்பல கைக்குட்பதிவது பற்றத்தனை யுற்றற்கருளென - முறை

யோதி - பட்சத்தொடு வர்ச்சித்தறமிது பற்றற்றவர்முத்திக்கவரி வினை பட்டிட்டுயர்துட்டர்க்குறுதுய - ரெனவேதான் - நிற்றற்கற முற்றித்தவநெறி யத்தைத்தின மொற்றுத்தகுமிது பிற்கத்துயர் சொர்க்கத்தடைவழி - நிசமாமோ - பொற்புப்பெற பெற்றக்குரு முனி யற்குப்பரனிட்டத்திருமொழிபத்திப்படி நற்றப்படியென விதிகூறி - வைத்துத்தயை மெத்தப்பரிவுள கர்த்தத்துவ குற்றக்கச டனை மைப்பத்தக விட்டிட்டருளொரு - தருமீதே - வைத்துக்கர மற்றக்கழல்கழி வச்சிரத்துளை நற்றுத்தனைசிலு வைக்கொற்றுறு மிக்கக்கதிபர - முதலோனே. (கூய.)

உயிரைத்தரு பரனைப்புவியுள மதிகெட்டிரு ளதிலுற்றசடர்க ளுயர்நற்கதி பரனைப்பணிகில - ருமூடர் - உடைகற்களோ டிசைபட்டிடுமென மிருகத்தொடு மதிமற்றுடிவையு முலகத்துள பொருளெத்தனைபல - வுளயாவும் - அயருற்றிரவியொடிப்புவி யுள வழிபட்டிடு பொருளைப்பரனென வறிவற்றுறுமடையர்க்கிறு மதி - குறையாதே - அதமெத்தனை மதமெத்தனைதமை யறிவற் றெழு வெறியெத்தனையிவ ரழலுற்றெரி நரகுற்றமுவர்மெய் -யெ னையாள - சுயதற்பர னுலகுக்கொருகுரு வெனவித்தரை செயுமற் புதமிசை சொலுமுற்பிசி னெனுமப்பொருணதி - கரைமீதே துயருற்றவ னெருமுப்பதுமின மறுமெட்டுறு வருவிப்பிணி யொடு துணையற்றவ னுதவிக்கொருவரு - மிலதாக - தயிலப்புவி தனிநற்கிருபையுள நெறியற்பமுமறுவற்றிடுநிதி தனையொப்பனை யறிவற்றிடவரு - பரதாதை - தயைவைத்திடு மவனைத்திடமுட னிசைகெட்டிலையுமெடுத்தினிநட தவமுற்றுறு வெனவைத்துயர் சரண் - முதலோனே. (கூக.)

அரியபரமர்களுறுகதி யதுபெறமுதிருமறைநெறியருள்செ யுமமலனை யயர் விலனுநின மடியர்கள்பரவிட - வறியாமல் - அ யன்றுடரியரனினம் வெகுமறமுறுவினைகளுறுபல வலகைகளினை தொழு தமரர்குருபரனிவரெனமதியறி -விலராகி - பொரியுமவல் பயறிளநிருமதுவொடு மிலகுவடியமுதுடன் வெகுபலவகை புக லுமறு சுவையிதமிக நிறையுறு-பெலிபூசை-பொருவவிதவித நிற முலவியேசெய்தும் வதனதனவிழி பொழிமிகமயல்தரு புலைய விலைமகளினை மிசைதுயில்செய்து - முழல்வோரே - தரிததிமி

தரிகிடதிமிதகதக தகததகதக தகதிமிததிமித தகததகதகண செககணனென - நடமாடி - சகசநிதியுறு மமரர்கடுதிசெய மகுட முடிபுனை யரசர்கள்பணியுற தவமெய்யமரர்களிருடிகள் முனிவர்க -ளடிபேண - மரியும்விரிதவ கனிகளுமடிதொழு திடவேவரு குரு பரமனேயதிவித மதுரகிருபையொ டெனையுனதடிமையதாக்கி - மதியுநிலைதவ செபமுடனறமுற நிதமுமொருபுதுநெறி யகமுறவரு மதிசெய்திருவெலமலைதனில் வருகுரு-பரநாதா. (கூஉ.)

பந்தஞ்செறிவுற்றுக் கசடேயுறு மின்சுங்கொலை பற்றிப்பிறவாழ்மனை பங்கங்கெட நத்தித்துலையாததீ - வினைமேவி-பஞ்செந்திரியத்துப்புவிமானுட னெந்தன்பெருமைக்குச் சரியாதிகள் பண்டும்பர வுற்றுற்றிடுவேனென - மதமேவி - சிந்துந்தனமுற்கப் பொருகாயென செங்கண்குவளைக் குற்றுறுமாமென செங்கண் கொவை தித்திக்கனிவாயென - விரகூறி - செஞ்சந்தன சட்டப் புழுகேபல விந்தம்புனைவெற்றிப் புலைமாதொடுசென்றும் புணர்வுற்றுத்திரிவேனுய - வெதுநாளோ - தந்தந்திமி தத்தத்திமி தோகிர்த வென்றும்பல சத்தத்தொடுதானடர் சந்தம்பலவுற்றுப் புகழ்கீதநல் - லிசைபாடி - சந்தஞ் செயமுத்திப்பரனேகிர்த டிண்டிண்டிகு பத்தர்க்குரியோரிவர் தன்சன்பக முட்டிட்டடியேபர வமரோர்கள் - வந்தண்டர்க ளர்ச்சித்தடிபேணவு மிந்தப்புவிசிட்டர்க்கொளிபூணவு மண்டும்பகைவைத்தப்புவி நாணவும் - அருள்வோனே - வஞ்சஞ்செறி பத்தர்க்கசட்டயுறு நெஞ்சந்தனைமுத்திப் பதமேயுற வண்டிங்குறைபற்மச்சரணேயரு - ளிறைமேயானே. (கூ௩.)

முத்திப்பற்றுக் குற்றுப்புத்தி முற்சொற்பற்ற - வறியாதே முட்டக்கெட்டுப் பட்டுத்திட்டி முட்டக்கெட்ட - வறியேனுய் வெட்கித்துக்கப் பைக்குட்புக்க வெக்கச்சக்க - மிகவாகி - விக்கத் தக்கச் சிக்குட்பட்டு மெத்தக்கஸ்தி - யுறுவேனே - நற்கத்தர்ச்சித் தத்துக்கொப்ப நட்புப்பத்தி - விசுவாசம் - நற்றிச்சுற்றப் புத்திக் கற்ப னைக்குட்டிட்ட-மனமேற- வைக்கொற்றற்சித் திஷ்டச்சட்டமைப்பத்திற்ப - வடிவோடு - மற்றச்சித்திச் சிற்றைப்பற்றி மட்டிட்டுற்ற - வமரேசா. (கூ௪.)

அணியுறு மாதித மடையர்வெகுபேர்கூடி யரியபரமா தேவ-னெனவியு - மரசர்பிணமேயின முறநேசுடுகாடான வதிலே

யொருதேவால - யமதாக-கவனமுறவேமான சொருபமுறையே யீனர் கருதியதில்மாபூசை - யிடவேதான் - கதியருளுதேவாகி கட வுளெனவேநாடு கசடனுயிர்தீமீதி - லுழலாமல் - உவகையொடுவா னோர்கள் தனணவெனவேபாட வுறுவர்முனிவோராட - வருணடி புலவுமறையோராட வளருமெய்னயாரோட வொளிருமுடிநேராட வெலைமீதி - னவகனிகடாளுட வலகைவினையேயோட நாருருவி னோர்பால - னெனவேதான் - நடுவனெனவேகாலி யடைகுடியிலே மேவு நளினபதமேநாட - வருள்வேதா. (கூடு.)

இட்டோயுறுபாவமிருந்தெழு படுபாவிகளாகியவஞ்சக நிதமே தவ நீதியறிந்தவ- ரெவராகா- வெனவேபலதீதுறுசண்டிகள் கொ லையேமிகு சோரருறவண்டர்க ளெரிதீநரகேகுதுகண்டிரோ - அட கூகூ - திடனுயிவை கேளடாகந்தலே யெனமாமறையோதிய நன் குரு திருதாமரையாகிய நண்பத - மகமூரார் - சினமேவிய பாழ் நரகந்தனி லநியாயமதாக நடந்துறு சடமோடுயர்கால மனந்தமு மெரிபோதோ - ருடலார்துணை மாவுறவென்கிலு மனையாளொரு தாய்மகவென்கிலு முதவாதொணுமேதிடனென்றதை - யறியாத முழுமூடனாயே நிதமுன்றிரு கிருபாகரமாகியநின்றய வுடன்மா மறைசேரவுகந்தரு - ளமோசா - அடடா விதுமோசமேவந்தது யினியாகிலுமாதிபரன்றனை யறிவோமுபதேசமெனுந்திரு- மறை சேர்வோர் - அவமோகதியானதுசென்றிட வருள்வாய்முனியாரகமுந் திய வருளேபொருளே பரசுந்தர - சருவேசா. (கக்சு.)

அவனிதனிலுறு பவமளவற்றிடறினை நினைவில்வினவிடமதி துயருற்றுழன்றன ரரிபரவியவிழி யவர்க்குப்பொருதிடு - பவரா கும் - அயனொடரிசிவ னெனவறிவற்றவ ரவமோடவனெனவரு முறைமற்றவர்களு நிலமுறுபுவிமிசை யதனில்செத்தவர்களு- மதி தீத-கவலைதனையுறு நரகெரியுற்றவர்களு மலகையொடுமதனுரு தருகற்சிலைபுவி கடலுமுயர்தலமதி கதிர்மற்றுளபொருள் - பரனு மோ - கபடவிகடனை மதமெழுமுட்கசடனை குருவினிணையடி யொரு பொழுதர்ச்சனைபுரி கருமநிறை யுறுமெனவியனற் றவ முற - வருடாராய் - விவதகரமுறு மமரர்களொருமித் தடிதொழ வரியகதியதுபெற வரநற்செயலொடு மிகுதொனிகட்ரிடரியென மத்தளமொடு - விசையாவும் - விரைவுசெறியதமொடு தகத்ததிமி

திமி தனனதனதனதனத னதத்தனதன வெனவே தவில்முரசொலி யெழநற்சுரவிணை - இசைவீரர் - நவையில்திரியொரு பரனரு ளுற்றெழுகதிர்முடிதனையமரர்கள்சிரமிசைவைத்திட நரர்கள்செய் பவமறவருநற் சுதரிறுதி - கொலுமேவி - நளினமதிபதமரியனை யர்ச்சனைதர சடமதொடுபரகதி பெறுகத்தயைசெயுந் தலைமை மிகவுறுசெப தவமுற்றவர்பணி - சருவேசா. (கள.)

அணைபுதரவிட்டி லணுவெனவேகூட்டி யதையுருவினீட்டி - நாளுக - அவனிமிசைகாட்டி யனைமுலையுமூட்டி யழகுறவேதே ட்ட - மூளருகி- வினையவிழிகாட்டி யமிர்தமொழிநீட்டி விரகவலை மாட்டி - பவமாதர் - விகடமதிலூட்டி யதிலேவெகுகோட்டி மிகவுமிளாவாட்டி - யுழல்வேனோ - இனிமையன்முகிபாட்டி லமூ துறவுகூட்டி யெடுபிணமேநாட்ட - லுடனேயா - ரிடறுகுழி மாட்டி யொருகைமணல்போட்டு மிருசமிழ்போட்டி - லணை யாமுன் - இனியபுறைநீட்டி தவிதரசர்பாட்டை யிதமுறவே கேட்ட - வமரேறே -எனதுவினையோட்டி மனதிலறமூட்டி யினி யபரநாட்டை - யருள்வேதா. (கஅ.)

பந்தஞ்செறி நீதநிறைதுறு குன்பந்தனை யேயணிவாகியு மண்டும்பவமேநிதமேசெய்கு - துலையாமல்- அங்கந்தழலேலெரி லூசியு மென்றுந்தமி யேனுயிரோகிட வந்துந்தவமேயுற வேசெ ய்து - முழல்வேனோ - மூந்துந்துறமேவயுறு தூறினை அன்றஞ்சிய மாதவரோடிற முந்தெஞ்சலதேதரவேணுமென் - றுடையோனே மொண்டும்புனலமாரசமாகவே சென்றுங்கலிமேலெனுமூர்மிசை மூந்துந்திறமே யிவையேசெப்து மெமையாள்வோன் - விந்தஞ் செறிதாண்மலேமிகுற நின்றம்பரமேபுகவேகிடவென்றும்பரரான வர்கூடியே - நடமாடி - பிஞ்சுந்தொனி டிருடுடுடெனடுண்டுண் டுடுடுடுடுடு வெங்குடம்பறை டோடெனடோடென - வியல்வா னில் -வந்துஞ்சடமோடெழில் தாதைதனந்தஞ்செறி தாய்வலமீ துற மன்றும்பர ஜெஜெய ஜெய வென - வமைவோனே - வஞ்சஞ் சடல் மாலுழல்மாசனை யென்றும்பத மானதுமேவிட வண்பங் கய மார்பதமேயரு - ளமரேறே. (கக.)

அருணிறைந்து பரந்தளவின்றிய விறையெனும்பர னெந் தைதவஞ்செறி யமரர்தங்களை புண்டுசெய்கின்றனள்-பரமீதே-யதி

லறந்திகழும்பர்பரன்றனை மிகவணங்கி யிறைஞ்சிநவஞ்செறி யடர் பரந்தணிலுந்தியனந்தருள் - சபையானு - ரிருளடைந்து மதஞ் சிலகொண்டெரி நரகம்வந்து மெரிந்தலறும்படி யிதமிழந்தல கென்பெயர் கொண்டனர் - சமராதி - யெரியுதென் றுழலும் புரஞுஞ்சில வலறிநொந்தினி யென்செய்வோமென்சில விடர்பு ரிந்தகொடும் பவமென்றன - சிலகூளி - பெருமையுந்தும கந்தை யெனுஞ்சில நடுநடுங்கிமலங்கிவிழுஞ்சில பிரியவுந்தட மிங்கிலை யென்றன - சிலகூளி - வரமிழந்துநொறுங்கினுமென்சில பல மழிந்தழகின் றிலமெனசில பிரைமங்கி நிறங்கரியென்றன - சில கூளி - மருளிடும்பை யிகழ்ந்திடலன்றியும் நிலையுறும்படி கொ ண்டதினின்றுமெய் மனுடருங்கதி யொன்றுவதின்றெனு - மல கோடி - மறுகுபொங்கழல் மங்கினவிந்தனை யடியர்தங்களைவந்து புரந்திடு மலருநண்பத மின்பொடுதந்தரு - ளமரோடு. (ஈ.)

மறமேமிகுந்து மனமே மயங்கி மயலேயணிந்து பவமாதர் மனையேகிவஞ்ச மிகவேநிறைந்து மதியேகலங்கி - யிழிவோடு - அறமேதளர்ந்து பொறியே தமங்கியழுகாயெனங்க-முயிர்சோர- அயலோரினங்கள் பிணமேயெடுங்க ளமைபூமியெங்க - ளெனநீடு - தரைகீழிடந்து குழியூடடைந்து நலியானவெந்த - னுடன் மீதே - தயவோடகங்கை மணலேயெறிந்து தனையோர்களொன்றி- குழிமூடி - பிறமேநடந்து இனிவாருமென்று பிரியோர்கடந்து - அகலாமுன் - பிணிதீதடர்ந்த வெனையாளவுன்கை யிணைகோ டடர்ந்த - சருவேசா. (ஈக.)

மூதாதையுற்றபவ மேதாவெனருக்கியெனை மோகாவெறிக்கு ளூறு - பவமேக - மூதோருணாத்தகலை யேதேர்பவர்க்குள்வரு மூதாகமத்தினுரை - நெறியூடே - கோதேயறுத்தொழுகி யேதா னடத்நவறி யாதேகுறித்தெரிவை - யிடமேவி - கூசர்மலுற்றபவ மேதானுரைக்கரிது கோபாலருற்றமலை - வருவோனே - நீதாகமத் திலினி யேதானடக்க வருள்நீதானிரக்கமொடு - தருவாயே - நேரா கெசித்துநக ரோறேபுனைக்கழுவும் நீராலொருத்திமக - வுறுநோ யை - வேதாதவிர்த்தமரி சேயேமிகுத்தநவ வீறுகியுற்றபர - குரு நாதா - மேகரசனத்திலினி ஞானுவருக்கனென வேதானிருக்கவரு சருவேசா. (ஈஉ.)

பரமுமமரு மஞ்சுந்துடுவெறி கதிரும்புவியலை மண்டுந் திரைவனா பகருநறைகமழ்கந்தங்கதிவித - தருயாவும் -பணிலமுத னலமுஞ்செங்கனகமு மிலகுவெழின்மிகு செம்பஞ்சதிரௌபல வும்விதிபுரிதுங்கம்பரமனைத் துதியாமல்- உரியதலையின தங்கஞ் சருவிய பிரமனெடுமது வுண்டும்பலவர்க ளுடையமலையழிவுந் தும்படிசெய்த-அரியோடு-மூமையள்கதிரொழிலகண்டுஞ்சினமெழ தவசினரிவைய மொன்றுங்கலைநெகி ழறவேமயல் விடுவண்டன் சிவனையு - மவன்சேயன் - விரகவினைமிகமிஞ்சுங்கரிமுக னனையை புணர்வுறவென்றுங் கவனமே மிகவுமுறுகஜ கன்றன்றுனை அறு முகனோடு - விரிவோடழிவதுதங்கும் பலபொரு ளதனைவிதிபர வென்றும் பணிவுறு வினையனுனதிரு செம்பங்கயமுற - வருள் வாயே - விரைவிலமரர்கள் தந்தத்தனவென முனிவரிருடிக ளின் றங்கடிமலர் வருடியதிசயமென்றஞ்சலிசெய - வொருமூவர் - வருககதிர்வெகு சங்கம்பிரபையெயன வதனமதிபணி யுந்துந்திக ழருள் மகிமைதரிசனை யன்றங்கருளிய - வமரோரே. (௱௩)

தீதைத்தேடிமிகுத்தமறத்தரு மாயக்கூளிவசத்து றுபித்தர்க டையுற்றேயெரியவர்க்குளரக்குரு - குலையாகி - தீகட்கேயினையிட்ட படிக்கவர் பாசத்தால்விசிகட்டு நரர்க்குறு தீயுற்றேபவர்நித்தமு மித்திற - முகிபாநாள் - தீதற்றோர்பாமுத்தியினுத்தம நாதர்கலே தவ நித்தமியற்றிடு நேசத்தாலுயர் நற்பதமற்றுவர் - திடனுமல் நீசப்பாவியெனக் கொருபுத்தியு மேசத்தேயு மிலைத்தினநித்தமு நேருற்றேவினை விக்கநினைத்திடு - மதிகேடன் - வாதக்காலன நத்தினடக்கவு மீதற்கூழைகரத்தினடைச்செவிவாய்மைத்தூய்மை விழிக்குளுறுத்திடு-வறியேனை-வானுற்றேபுவியிற்குளெனக்கொரு தாயைப்போலொரு சத்தியநற்றவ வாறைத்தாமேயெமக்கறி வித் திடு - மரிசேயன் - ஆதித்தாயத முற்றவினைக்குள பாவத்தோடு மடித்திடுமக்களை யாசித்தேதவ நித்தமியற்றிட - வறிவோதி - யாக த்தேயமுதத்தை நவத்தொடு ஞானப்பாலுறு வித்தைவிதைத்தவ ராகித்தோன்றிய வற்புதநற்பத - வமரோரே. (௱௪)

நித்தமுங் களங்கமேயுறு குற்றமுங்கலந்தெந் நேரமு நிச்ச யத்தளர்ந்துபேய்களோ - டுறவாகி - நிற்கிலுந்தொடர்ந்து காயமு மொக்கவஞ்சினங்களேசெய விக்கினன்கலங்கிமாசுறு-நெறிகேடன்

செத்தவன்குணுங்கிறலுறு பத்திரங்கலங்கிதீநர கத்திலுங்கிடந்து
மூழ்கியு-முணராமற் -சித்தமும்பிரங்கியேநறுபற்மம்நின்றிலங்கு
தாளிணை திக்கெனுங்கெழுந் துயானுய - வரவேணுந் - தத்தனந்
தனந்தனதன டிட்டுடிண்டிடிண்டுடுடு தற்பரன்பிறந்தகானெனன
வமரோர்கள் - தக்கிடந்திமிந்த தோமென டிக்கையுந்தனந்தன
வென சத்தமும்புகழ்ந்துபாடிட - வருவோனே - சித்தருந்தவங்க
ளாலுறு பத்தரிங்கிறைஞ்சியேநெறி சித்தமுங்கொணர்ந்தமேவரு
டருவோனே - சித்திரந்துலங்குமாதவர் பெற்றிடுஞ்சிறந்ததாளிணை
சிற்பரும்பணிந்துகாண்ரு - விறையோனே. (௱௫.)

அடர்புறமிரட்டிவிழி யுடறனைமினுக்கியிடை யசையவே
நகைத்துவரு - பவமாத - ரவனிதனிலுற்றொரி நரகவினைபட்டு
ழலு மதிகவினைவைத்துமுடி-வலைவீசு - மிடறுறுபரத்தையர்கள்
கணிவலையிலுற்றுழலு மிழிஞனையுனக் கடிமை - யெனமீள்வாய்
இனியகதியுற்றுலகி லரியபரமக்குருதி யெனமுனிவரர்ச் சனையி
லுயர்வோனே-தடவரையின்மிக்கதன துயாது துணித்துமவடனை
யனுமுயிர்க்கவருள் - சருவேசா - தவமதியுமற்றுமுறு மதமதினு
மித்துவெகு தவறுவிளைவித்துவரு - தமியேனை - நடையுறநடத்
தியுமதருள்வரமளித்தெனது நசல்வினைதவிர்த்துமுன தடிபேண
நளினகுணமற்றமிகு கசடனையிரக்கமொடு நயனமுநிரட்சை புரி
யமரேசா. (௱௬.)

நெரியவருதிருவனத்தில் ரிஷிகள்குடியையழித்த நெறியில்
சிவனைமலர்த்தி-மிகவீன-நிகழ்வெணெயுமிடைச்சி மணையைமகிழ
வெடுத்து நெரியவுரலோடடித்து - வுறுமாலை - மருவிமகளையழி
த்த பிரமனுடனேயமைத்த மதியிலலகைக்குலத்தோர் - பரனுக
மடையர்மிகவுமெத்த கசடதுறவேமரித்த மனிதர்தனையே கதிக்
கொர் - பொருளாமென் - றிரவுபகலுமவர்க்கு வெனதுவுடைமை
யழித்து மினியடலியேபடைத்து - மிடவேதா - லிடறதுறவே
யெரிக்கு ளெனையெயிடுக நினைத்த விதுகளெனையே செருக்க
வுழலாமல் - அரியமரியின்வயிற்றி லவனிதனிலுதித்து மடிய
ரிடரோயகற்ற-நினைவாகி - யடரும்பெதலெம்வளாக்குளமரர்மிகவே
துதிக்க வருணனெனவேயுதித்த - சருவேசா. (௱௭.)

ஆதியந்தமிதாகிதமாகிய வீவுதங்கிய்ருபமுருமலே யாகமஞ்செறிநீதிதயாபர - னெனவோதி - ஆயுமந்திர மானதிஞனித காலசந்தியில்வேழ்விதல்காமலே யாருலங்களொ டாடியகூளியினுழல்வேனோ - பூதியம்பெறு பாழுடலாலுறு தாகமண்டியெந்நேரமுமேபவ பூவைநன்புறு மார்பபயோதர - மருளூட - போனகஞ்சுவையாருறவேதினை வாகிவஞ்சமொடேயெழுதீவினை பூணுமென்றனை யாள்கவேதாளினை - யருள்வாயே - தீதமிந்திமி தோதிமிதாதிமி டுடு டுண்டுடு தீதரி தீதரி சேகணங்கண தோகிர்ததாவென - நடமாடுஞ் - சீர்சிலம்புக லாவெனவேமொழி டகுடின்டிகு டகுகு டகுகு தேவசுந்தர நாத ஜெயாவென - வருவோரும் - ஓதியஞ்சுக மாமௌனவேயசரீரரஞ்சலி தானுறவேகிரி யோர்புறந்தனில்மாமரியாள்கர - மூறைவாழ்வே - ஊறுவன்கடிதானரகேகிடவீறுகந்தெழில் மாமறையேறித மோதியிங்கரு டானிறைவே செய்த - வமரோறே. (௱அ.)

படிவுந்திமடிவுந்தி யுடலுந்திமதமுந்தி படவுந்திவெறிமந்தியெனவேதான் - பகைகொண்டகழுதன்று விழுகின்றநரகொன்றுபடவென்றுமுடிவன்றி - யெரியூறு - உடலென்று மூலகென்றுமனையென்று மகவென்று முடையென்று நிதியென்று - மிகவீணே - யுதையுண்டு விடியுண்டு அடியுண்டு கடியுண்டு வுடல்விண்டுதலைவிண்டு - மிகஞெயன் - முடியொன்றிற் பறியுண்டு எறியுண்டுகுறைகொண்டு முறிவுண்டு பொறிவுண்டு - அடசீசீ - முனிவுந்தியினியிந்த வுடனிந்தை சிறைகந்தல் முகிவின்றி யுறுதொண்டர்சபையேற - வடிவெங்கள் மரிமங்கை தனதங்கை யுறுதுங்க மகவெங்க ளுறுபங்க - மதுதீர மகரந்த முறுவிந்த வினைதந்து கதியுந்த வகைபுந்தி தரவந்த - சருவேசா. (௱கூ.)

திதேமி தத்துவர மீதேநிறுத்துநெறி சேராததுத்தனித-மறிஞோர்கள் - சீர்பாதமுற்றுவுப தேசாகமத்தைமன தேயாரவைக்கவறி - விலகுகி சூர்தமி தத்துமிற மோகாசையுற்றுவுற வோர்துதினிற்றெரிவை-தனதாக தூறேமிகுத்துவெரி பாதாளமுற்றதிலே சூடேபெருத்துழல - விழுகாமுன் - வேதாகமத்தினிய நேரானகற்பனைகள் மேலானசித்தருணா - விதிபோத - வீறுனபத்தியுணர்வாமேனோர்கள் முத்திபெற வேதான்வலத்திலுற - கதீமேவா - வாதே

மிகுத்துநர கோயாதெரிக்குறுவர் வாகாயிடத்தில்வர - நடுகூற
வானோர்கள் மூத்தரொடு மேகாசனத்தில்வரு வாழ்வேயெனக்
கருள்செய் - இறையோனே.                                                    (௱ய.)

அடருகாற்கடலோ டவனியாற்கரணு மதிகநேர்ப்பரமோ
டெழிலுரு - மறிவுளாத்துமரு மமரர்நாற்றிசையி லமையநாட்டு
பொரு-ளொடுயாவும் - கடவுளாற்படைசெய் துறுதலேற்றுவவை
கருதியேத்தவுணர் - வறியாதே - கருதிநாப்பிலுறு கசடறுத்தும
மே கனலிருழ்த்திடுக - வுழல்வோஞ்-மடையராய்க்கொலைசெய்
மருளராய்ப்புனித வழியைப்பார்த்துணர்வி-லறிவினர் - மறையை
மாற்றிவெகு மறமேதேற்றுமவர் வழியைத்தீர்த்துவுன - தரு
ளாலே - கடைசிராத்திரியி ரறுவர்தேக்குறநற் கருணையூட்டுபர
வெளியேனை - கரம்மதுாக்கியுன தடிமையாக்கிநல கதியில்சேர்க்க
வருள் - சருவேசா.                                                    (௱யக.)

பாதகஞ் செறிவானமங்கைய ரோடுழன்றுபடாதசஞ்சல பா
ரமென்றலைமீதுதங்கிட - மெலிவாகி - பாழிடங்களிலேதிரிந்ததி
னுறும்பிணிசாரமிஞ்சிய வாதைதங்கிடவேமெலிந்துயிர் - விட
வேதான் - தாதையன்றிய பாலர்பின்னுறமாதுதன்திருநாணெறிந்
தழ தாகமுந்திய மாதருஞ்சில - ரழவேதான் - தாரெடுஞ்சில வா
ழையும்பல சாதிசண்பகதாமமிஞ்சிப தாவரம்பொருள் பாடையி
ன்கணே - விளித்தோனை-பூதலந்தனிலோர்கிடங்குசெய் தேசுமந்
ததில் பூதபொந்தியைப் போடுமிங்கென வேயிணங்குகல் - லறை
மீதே - போடுமுந்த வென்னுவியும்பர்க ணுடுமந்தநன் னுடுவுந்தி
டப் போதவுன்திருப்பாதவம்புய - மருள்வாயே - தாதிமிந்திமி
டேகிணங்கிர்த தாசெகுந்தரி டீகுடிங்குகு தாதையென்றம ரோ
ர்புகழ்ந்திசை - நடமாட - சாலவெங்கினு மேயிருந்தவ ஆனதுங்
கம னுவனந்தனிற் சாரவுந்திக ளாகமந்தரு-சருவேசா. (௱யஉ.)

ஆதமரவத்தை மேவியிரதிக்குள் ளாகுலமிசைத்த - வண்ட
லூசி - யாகமுள்ளிருக்க தாகமதெழுப்பி யாயிழைகள் பக்கல்
மிஞ்சவேதான்- பாதகம்வளர்த்த எழ்தலையினுற்ற பாவமதியுற்ற-
வஞ்சனுகி - பாருறுகவட்டை பூறெணவிளைத்த பாவிநரகத்துள்
வீழ்ந்திடாமல் -வேதநெறிபற்றி மாமரிகரத்துள் வீதியழவுற்ற
வும்பர்கோனே - மேலவர்தொனிக்கடீ குகு டிகுக்கு வீணையு

முடிக்கை-மண்டிமோத - தாதிமி திமித்த தோமெனமுழக்க தானனதனத்த - மென்றுபாட - தாயுளமகிழ்ச்சி யேபெறவுதித்து தாதையெனவுற்ற - தம்பிரானே. (௱௰௩.)

அரியபத்தர்க்குரிய தவமளித்திித்தனாயி லமரரர்ச்சிக்குமொரு - பொருடாமே - அதமமுற்றிப்புவியில் வெகுபவத்துற்றமனு வதனைரட்சிக்கமிகு - பரிவாகி - மரியைகற்புக்கினிய வுதரமுற்றிட்டசிறு மதலைபொற்பிற்கருணை - வடிவாகி - மனுபவக்கட்டகல தவில்முழக்கத்தனைய மறைபடித்துப்புவன - குருவாகி - தரிய தத்தத்ததிமி திகிர்துடிட்டுட்டுடு தனனதத்தத்தவென - நடமாடி - தனமுழக்கிக்கிரண மணியசைப்பக்கமழு மலருதிர்த்துப் பரவ - சுரர்தாமே - உரியநற்சுத்தமறை விதிமொழிக்குற்றவுடு வொளிவினைப்பற்றிவரு - மிறையோனே - அரியபத்தர்க்கினிய விறையுறுத்தப்பணியு முனது பற்மச்சரணந்-தருமீசா. (௱௰௪.)

இந்தனைபுலகிய னன்றெனமனதி லிசைந்தருணரகினில் விழுபேய்கள் - இங்கிடுபவவலை தென்படமுடுகி யிருந்தநல்வழி நிலை - யறியாது - நிந்தனையுறகப டந்தனைவிகட நிறைந்திடுபவமதி - லயராமல் - நெஞ்சுறுவினையக வஞ்சனுமுயர்தல நின்பரகதிபெற - வெளிதோதான் - அந்தரமதியொடு திண்புவியதனுளமைந்தெழுபலபல - பொருள்யாவும் - அன்றொருநொடியி லுகந்திடவருள்செயு மம்பரநிறைபொரு - ளிறையோனே - சந்தொமை விரன்முறி வைத்திறுமுறவவர் சந்தெகமறவுமே - வருவோனே - சஞ்சலமுறுமெனை யஞ்சனியெனவுன சண்பகசரணருள் சருவேசா. (௱௰௫.)

இருளார்டவமேவிய வங்கமே யுருவாகியபாழுடலங்களை யிரு'மால்விழியால் வருவஞ்சக - முறுபார்வை - இதுவேயரிதா மெனவஞ்சமேயுறவாகியபாவையர் தங்களோ டிழிவேசெய்தபாதகனின்பத - நினையாமல் - இருளேயுள மூவர்கடங்களை மதியேயிலராகிய வஞ்சரை யிறையோரிவராமென வஞ்சலி - மிகவேசெய் - துழல்தீ தகனுங்குலமுந்தியே நரகேகிடவே பவமிஞ்சியே யுணர்வேயிலியாகியே துன்டன - துறலாமோ - திரியாவரமாகிய வென்றொழில் விடவேயெனையாளுக வின்பொடு செகமீ

துருவாகவமைந்தரு- ளுறுசேனில் -திருவேநிறை மாமரிசெங்கை யில் வருபாலகனாகிய நம்பர திகழ்கோனவர்வானவர் கும்புகள் - நடமாட - கிரிதாதிகிர் தீதிமிதிந்திமி டிகுகூகுகுடுகுகு டிங்குகு தரிதாதகு தீதகுதந்தகு - தனதாகு - தரிதோகிர்த தோதகுவென் றிசை மொழிகூறிட மாமலைவந்தரு டயவேநிறைவாகிய தந்தை யே - சருவேசா. (௱௰௬.)

மறப்பவத்தினுறுவெகு வஞ்சப்பேய்மாய்கைக ளூறக்கதித் தயலவினை நெஞ்சுற்றேறநீதினை மதித்துரத்தபுகழற மெஞ்சத்தா னேமனு - குலமேவி -மருட்டியுற்றபொருள்பறி வண்டத்தாசையுற வபேட்சைவைத்துமநியது மங்கத்தானேயுடைமறுத்துடுத்த வுட நிரங்கிக் காவேருவர்-அகலாமற்-பிறப்பிறப்பினுறுபல கந்தைத்தே வாதிக டனைப்பெருத்தவகைசிந்தித்தேவீணிலேபுறத்தியுற்றமடை யரோயுங்கட் கிதேதோமதி - யிவைதாமோ - பெருத்தசத்தியுறு பரந்தத்தராதல மூகித்ததுற்றமனுடனாயுஞ்சற் சாதாரண பெ லக்கணக்கதனினீ ரொன்சொற் றுனைசொல்வி - ருலகோரோ - திரித்துவத்தினொரு பொருடுங்கத்தயாநிதி - யனைத்துயிர்க்குமுத லுல கெங்குற்றோனாகிய திருக்கறுத்தமறையவ னங்கத்துறுதிரு ளசரீரி - செழித்தமுத்திதருபர னென்றித்தாரோரோதித மூளத்தில் வைத்துபொருள் மறைசிந்தித்தோதகாணும்! சடத்தையுற்றபொரு ள்களை வம்பிற்றுனேதொழு - தழுவாமேன் - அறத்தையொத்த முனிவர்களஞ்சுற்றுராதனை யியற்றமுத்திதருபர விந்தப்பாரோ ருளத் தமைத்துமுற்றுதவமுற நின்பொற்பாதாரமே -யருள்வா யே - அடற்கரத்தையெதிர்படை வென்றப்பாலேகிட திறுத்தி வைத்தவசம தோம்பத்தாதாவென வடுத்திரட்சைபுரிய வுகந் துற்றோளோர்பர - ஜெகதேவா. (௱௰௭.)

காய்மாகாரிகள் மூரட்டுமட்டிகண் ஞாயாஞாயமே புரட்டு துட்டர்கள் காசேதேடிய வபத்தமெத்தவு - மஞ்ஞான - தீய்மீ தாள்பவர்பவத்தகத்தினிலோயாபாதக வினைப்பரத்தையர் நீயா மோகெரியனற்குளூற்றிடு - முதுகாமர் - தீராமாயையி லெனைப் பிரித்துயர் சேனுடாகிய பரத்தில்வைக்கவே சீர்தேவாலய நிகர்த்த வுத்தம - கனிமாதென் - றாயாய்மாமரி துதித்தபொற்பத மோ யாதேநித மடுத்தறப்படி சாராவீனன்மேலிரக்கம்வைத்திட-எது

நாளோ - தார்பீதேகொலை நினைத்ததெத்தனை யூரார்தேடுகள் பறித்த தெத்தனை சார்வாய்மேபசியே பழித்தகுற்றமோ - தொகைகாணேன் - வாயான்மாபவம் விழிக்குளெத்தனை யாசாபாசமோ செவிக்குளெத்தனை வாபோநீயென மதத்ததெத்தனை - பெரியோரை - தேவாதேவனைத் துதித்தறி யாதேமோகம் விளைத்திளைத்தவர் சேருடாள்பவரறத்தை நித்தமு-நினையாத-மாபாவிகள்செய்பவத்தை முற்றிலும் வேதாவே நணிபொறுத்துமுத்தியின் வாழ்வேதரமிகு விரக்கமுற்றரு - ளிறைமேயானே. (௱௰அ.)

மோகவிழிமாதரோ நிவுறவாடி மோசமிகுதீய-வினையேனும் மோனமிருபால வீனமணுகாத ஞானியர்களே - நெறிசாரா-தாக மிகுதீய லேபியர்கள்மீதி லாசுகவிபாடி - அலையாமல் - ஆசையொடுநாளும் ஆரணதியான ஆகமவின்ஞான - மிவைபாடி - சோருபுரிமாய மானதுபடாமல் தூயருண்மேவார்கள் - நணிமேவா - தோமிலசரோச பாதமதைமேவி தூயகதிவாழ்வை-யடையேனோ-வாகைநிறைசூசை மாலியுடைசோதி மாமதியபாதி - யிடைமேவி-வானவரோடாயர் - கானமலர்தூவ - மாடடையின்மேவு - முதலோனே. (௱௰க.)

வாஞைப்பாகிய காவினிலேதரு மேலுற்றேயவ மேணவிய வேவெனு மாதுக்கோதியு ஞதனைமேயபுண - நசைமேவி - மாகத்தேவுரை மீறிட்வேபுரி யூசப்பேயது வீசியகாதக வினைச்சாலமிதாமெனவேயறி - விபாகி - தேனைத்தேமொழி பேசிய மாசதி வேசைகளே முறியாகியதாலுறு தீமைச்சாகர வாரியிலே திகை - தெரியாது - சீரற்றேயுழலலைமாகல மானப்பாவியெனுருபிரோதின சீதச்சேவடி யாருளாலுறு - விசுவாச - ஞானத்தானுடமேயதிலேயிலசை வாகச்சூழ்மூரு தேசசிநேகமு ஞாலத்தீதறு வீமமுமாமிவை - பாயாக - நாடித்துவர மேச்றுகாலெண வீசப்பாவமதாகிய நீரது நாடப்பாவ விமோனசமாகிய - வொருபேழை- யானத்தாலது வேயாழிவாகவு மேலுற்றே யறிவானது மாலுமி யாகிச்சமெணனு மாதுறையேயுற - வருடாராய் - ஆகத்தேதுபிலாரெருமாதவ ஞடச்சேடெழு மேகவிமானம தாகச்சீருடனேயதிலேவரு - முதலோனே. (௱௨௰.)

ஞானத்திருப்புகழ் முற்றிற்று.

(விருத்தம்.)

* குவலயமாந்தரரசரோடெவருங் கோவையாயணியும்வெண் மணியைக் குரைகடல்கொழிக்கும் வளமமர் தூத்துக் குடியெனுங் கோலமாநகரிற், றவறிலாமறைதநூலெலாமோர்ந்து சாற்றும்வண் டமிழ்க்கரைகடந்த தகைகொளந்தோனிக்குட்டியண்ணாவி தாப ரன்மீதுசொற்கவியாய், நுவலொணுப்பாகாய் நுண்ணியவொளி யாய் நூற்பிசகுதலிலாத்திறமாய்நோன்மையினதனைப்பகருவோர் கேட்போர் நுண்மையாய்ச்சேணுறுநெறியாய், உவரிசூழ்ஞால மதிலொருசுடராயுரத்தொடுபெயர்பெறத்தகவி ஞேங்கிடுஞானத் திருப்புகழதனை யுரைத்தனன் செகத்திலங்கிடவே.

* இது-மகா-ஸ-ஸ பு. சவரிநாத உடாத்தியாயரவர்கள் மாணக்கர் ம. சா. இயாகப்பிள்ளையியற்றியது.



# கடவுளுண்மைநிலைகூறிய நூ.

(இராகம் அசாவேரி.)

அறியார்யார் சுவாமி அறியார்யார்-உன்னை-அறியார்யார் சுவாமி,
அறியார்யாரெல்லோரகத்துங் குறியாநீயுறைதிரத்தி னெறியாலல்ல
வோசொல்லாரும் நீயுண்டென்பாரோகல்லாரும். - - - அறி.

செய்தவனில் லாதோர்பொரு ளெய்தவசமோவஸ்திரம் நெய்த
வனில்லாமலாமோ பெய்தசராசரமெல்லாம் நேர்மையாய் நிறைந்த
சீர்மையாய்ப்-படைத்த- நித்தனீயுண்டென்றியல்பாய்ப் பத்தரு
ம்பகர்ந்திடலால். - - - - - அறி.

மனிதரானபேருக்கெல்லாம் இனிதுடன்சுகாதனத்தில் புனித
ம்மகுருவாய் நனிகுடிகொண்டேநவிலும் ஈசனே திருப்பிர
ன--நினக்குச்-சாதகம்வேறேதுக்கினி போதகமுள்ளத்தி
- - - - - - - அறி.

புடனீயெழுதிவைத்த சுயவேதமொன்றுள்ளிருக்கத் தய
மேற்கல்லில நியமவரிவேதமா யளித்ததுந் தனாயோர்
உலக - மெல்லாமறியுமல கில்லா நாலுநுவலும். அறி.

நுவ நீயிருக்கும் பெருமையாரறிவொன ஒருவனுமூன்ற
மா யஉருவனுகியிங்கெழுந்து போதமும் சற்பிரசாதமும்
ஆதேதிருவருள்சு ரந்தே புரிந்தவெல்லாம். - அறி

மக்களுக்காகத் தாயர்பத்தியம்பிடிக்கும் நேயமாய்மக்
த்துக் காயருந்தவப்பாடுற்ற நீதனே மெய்ஞ்ஞானவேதனே
தந்-தன்னுலுமெய்ப்பித்தனை சொன்னுலுமுற்றிடுமோ.அறி.

இந்தநன்றெல்லாமுணர்ந்த னந்தகோடிமாந்தருயிர் தந்தனைதி
லை நிறுத்திவந்தனருலகமெங்கும் மெய்யனே அன்புறுந்துய்யனே
அகத்தின் -கண்ணுலுனைக்கண்டில்லா மண்ணூர்முகக்கண்ணில்லார்.

தேவலக்ஷணங்கள்முற்றும் பூவிலறியாரொவரும் தேவனொருவ
னுண்டென்று பூவிலறியாரொவர்தேவாதியே தற்பரஞ்சோதியே
இதனுல்-யாருமறிந்திலரொன்றினும் யாருமறிந்துளமே-யுன்னை.
- - - - - - *
அறியார்யார்சுவாமி.

(அ. முத்துச்சாமிப்பிள்ளை பாடல்.)

## மாணாக்கன் புகழ்ந்துரைத்த செய்யுள்.

(கழிநெடில் - விருத்தம்.)

குருமணிகுயிற்றும் பொற்சுவர்மாடக்
  கோலவிற்புதுவைமாநகரிற்.
குணிக்கரும்வளமை யு[illegible]வேளாள
  குலத்தினன்கங்கை[illegible]
முருகணிகுவளை மார்[illegible]
  மொய்திரைசூழும்பூ[illegible]
முருகுறுமேழிக் கேத[illegible]
  முயன்றருட்சவரிமுத்[illegible]
பெருகணிமனத்தின் பிரி[illegible]
  பேசியற்கேள்வியி னு[illegible]
பிரித்திடுந்தமிழைந் திலக்கண[illegible]
  பெற்றினற்சாமிநா தனு[illegible]
திருவணிநசனா நாதனைப்பு[illegible]
  திகழுளகலம்பகமாலை.
செப்பிநம்பரமன் ருளணியாகச்
  சேர்த்தனன் செகத்திலங்கிடவே.

